உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீ திருநாவுக்கரசர் திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 சித்திரை பகுதி 7

## நன்மதியாகட்டும்

தொடங்கவிருக்கும் தமிழ்ப் புத்தாண்டின் பெயர் துன்மதி என்றிருந்தாலும் மக்களின் மதி நன்மதியாக இருந்தால் துன்மதி உலகின் எந்தப் பகுதியிலும் துயர் விளைவிக்க முடியாது. பக்தி ஒன்றே நன்மதி தோன்றும் இடம் ஆகும். நம் திருக்கோயில் களைப் பாதுகாக்க வேண்டும் என்பதே இப்பொழுதைக்குச் சரியான நன்மதியாகும். அதனு லேயே ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் ஆலய பூஜைப் படிக்காசுநிதி என்ற ஒன்றை அண்மையில் ஏற்படுத்தி ஞர்கள். குறுகிய காலத்திலேயே சுமார் 10,000 வரை நிதி சேர்ந் துள்ளது. இந்தப் புண்ணியப் பெரும் பணியில் பங்கு கொள் வது மிக நலந்தருவதாகும். இந்த ஆண்டு நல்ல ஆண்டாக விளங்க இறைபணிகளில் ஈடுபடுவது மிக வும் அவசியமாகும்.

தேவாமிர்தத்தைக் காட்டிலும் இனிப்பான, சுகம்தரும் ஒன்றை மண்ணுலகிலேயே பெறலாம். அது என்ன என்று அருள் பழுத்த கனிச்சுவைப் பகுதியில் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கியருளியுள்ளார்கள்.

புத்தாண்டின் பலன்களை ஜோதிடர் திரு. ஏ. இராச மாணிக்கம் விளக்கியுள்ளார்.

திரு. எம். கே. பலசுப்பிரமணி யம் ஐ. ஏ. எஸ் அவர்கள் வள்ள லாரின் சீற்றம் என்ற தலைப்பில் ஒரு கதை வடிவக் கட்டுரையைச் சுவை சொட்ட வடித்தளித்துள் ளார்கள்.

ஆய்வு மாணவர், மதுரை திரு. கு. அழகேசன் அவர்களின் 'திரு வாசகமும் நாட்டுப்புற மரபு களும்' என்ற கட்டுரையின் ஒரு பகுதி இந்த இதழில் பிரசுரமாகி யுள்ளது,

வாகீசகலாநிதி அவர்களின் பிற வித்துயரை அறியாதவன் என்ற கட்டுரையும் பிற வழக்கமான அம்சங்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

ஸ்ரீ குமரகுருபரர் இதழ் தபா லில் வரவில்லை என்று அவ்வப் போது புகார்கள் வருகின்றன. அனுப்புகையில் நிச்சயமாகப் பிழை இல்லை என்பதை மட்டும் பணிவுடன் தெரிவித்துக் கொள் கிறேன்,

நி. ஆ. ர்.



அட்டையில் :

# அப்பர் சுவாமிகள்

அப்பர் சுவாமிகள் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் புகழனுர்க்கும் மாதினியார்க்கும் மகனுகப் பிறந்தவர். திலகவதியார்க்குத் தம்பி. இளமைப் பெயர் மருள்நீக்கியார். தமது இளம் பருவத்திலேயே தாய் தந்தையரை இழந்து தமக்கையாரால் வளர்க்கப்பெற்றவர். தேச நெறி நிலையாமை கண்டு காவளர்த்தல் குளந்தொட்டல் முதலிய அறங்கள் செய்தவர். அமண்சமயம் சார்ந்து வல்லாராகித் தரும சேனர் என்ற பட்டம் பெற்றவர். சூலை நோயால் வருந்தித் தமக்கையாரை அணுகித் திருநீறு பெற்று மீண்டும் சைவரானவர். திருவதிகைப் பெருமானை நோக்கிக் ''கூற்றுயினவாறு'' பாடிச் சூலை நீங்கப் பெற்றவர். திருவதிகைப் பெருமான் திருவாக்கால் நாவுக்கரசர் என்று பெயர் சூட்டப்பெற்றவர். பல்லவ மன்னனுல் அழைக்கப் பெற்றுச் சமணர்களால் நீற்றறையில் இடப்பட்டும், நஞ்சு கலந்த பாற்சோறு ஊட்டப்பெற்றும், யானை ஏவப்பட்டும் கொடுமைக்கு ஆளாகிச் சிவனருளால் இடர் நீங்கப் பெற்றவர். இறுதியாகச் சமணர்களால் கல்லோடு கட்டப்பெற்றுக் கடலில் அமிழ்த்தப்பெற்ற போது நமச்சிவாயப் பதிகம் பாடிக் கல்லே தெப்பமாகக் கொண்டு கரை ஏறியவர். திருவதிகையில் பலகாலம் தங்கி உழவாரப்பணி செய்தவர். தலயாத்திரை செய்யும் காலத்தில் பெண்ணுகடத்தில் சூலம் இடபம் என்ற இலச்சினைகள் இறைவனுல் இடப்பெற்றவர். சீர்காழியில் சம்பந்தரைச் சந்தித்தபோது அப்பர் என்று அழைக்கப் பெற்றவர். திருநல்லூரில் இறைவனுல் திருவடி சூட்டப்பெற்றவர். திங்களூரில் அரவு தீண்டிய அப்பூதியடிகளின் மகனை உயிர்ப்பித்தவர். திருவீழிமிழலையில் வாசியில்லாக் காசைப் படிக்காசாகப் பெற்று அடியார்களுக்கு அமுதூட்டியவர். வேதாரணியத்தில் மறைக்கதவம் திறப்பித்தவர். பழையாறையில் சமணர் கைப்பற்றியிருந்த வடதளிக் கோயிலை உண்ணு நோன்பு இருந்து அரசன் உதவிகொண்டு சமணரை விரட்டி மீண்டு வழிபாட்டுக்குக் கொண்டு வந்தவர். திருப்பைஞ்ஞீலியில் இறைவனுல் பொதிசோறு அளிக்கப் பெற்றவர். கைலைக்குச் செல்ல முயன்று வழியில் இறைவனுல் தடுத்தாளப் பெற்றுத் திருவையாற்றுக் குளத்தில் எழுந்து கைலைக் காட்சியைக் கண்டவர். திருப்பூந்துருத்தியில் ஒரு மடம் கட்டியவர். பாண்டிநாட்டிலும்

தலயாத்திரை செய்தவர். பல கோயில்களை வழிபட்டுப் பதிகம் பாடியவர். அலகிடுதல் மெழுக்கிடுதல் முதலான சரியைத் தொண்டுகளை வற்புறுத்தியவர். தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் சமணரது செல்வாக்கை வீழ்த்தியவர். இறுதியாகத் தமது 81-ம் வயதில் திருப்புகலூரில் சித்திரைத் திங்கள் சதயநாளில் திருவடிப் பேறு எய்தியவர். இவரது காலம் கி. பி. 6-7ம் நூற்றுண்டாகும்.

  

## ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | ரூ. பை. |
|---|---|---|
| | 6—3—81 வரை கூடுதல் | 8520—00 |
| 1. | சிதம்பரம் திரு. G. வாகீசம் பிள்ளை அவர்கள் | 500—00 |
| 2. | குடந்தை சிவனடியார் திருக்கூட்டம் திரு. S. அருணசலம் செட்டியார் அவர்கள் | 111—00 |
| 3. | மந்தை வெளிப்பாக்கம் திரு. M. K. பொன்னுசாமி அவர்கள் | 101—00 |
| 4. | பைங்காட்டூர் திரு. M. பரமசிவ குருக்கள் அவர்கள் | 101—00 |
| 5. | மதுரை திரு. A. T. மாதவன் செட்டியார் அவர்கள் | 25—00 |
| 6. | திருச்சி திருமுறைப்பணி திரு. முத்துக்கந்தசாமி தேசிகர் அவர்கள் | 25—00 |
| 7. | திருச்சி திரு. A. முத்துக்குமரன் அவர்கள் | 25—00 |
| 8. | ஈரோடு அருள்நெறி திருக்கூட்ட அன்பர் ஒருவர் | 25—00 |
| 9. | கதிராமங்கலம் திரு. R. சுரேஷ் அவர்கள் | 21—00 |
| 10. | கோட்டார் திரு. மணிகண்டன் அவர்கள் | 21—00 |
| 11. | ஸ்ரீவைகுண்டம் K. G. S. கலைக்கல்லூரி, பேராசிரியர் திரு. P. வேலப்ப பிள்ளை M.A., அவர்கள் | 21—00 |
| 12. | இராயபுரம் திரு' கோ. நா. அன்பெழிலன் அவர்கள் | 20—00 |
| 13. | ஆடுதுறை K.G.S. மேல்நிலைப்பள்ளி தலைமையாசிரியர் திரு. P. மகாதேவன் அவர்கள் M.A. B.Sc., B T. | 12—00 |
| 14. | ஸ்ரீவைகுண்டம் திரு. S ஆறுமுகம் அவர்கள் M.Sc., | 11—00 |
| 15, | ,, திரு. S. குமரகுருபரன்பிள்ளை அவர்கள் | 11—00 |
| 16. | ,, K. G. S. கலைக்கல்லூரி எழுத்தர் திரு. V. சுப்பிரமணியம் அவர்கள் | 11—00 |

| | | | |
|---|---|---|---|
| 17. | ஸ்ரீவைகுண்டம் | K. G. S. கலைக்கல்லூரி எழுத்தர் திரு. U. பலவேசம் அவர்கள் | 11—00 |
| 18. | ,, | திரு. O.S C. பாக்கியம்பிள்ளை அவர்கள் | 11—00 |
| 19. | திருப்பனந்தாள் | K.V.S.S. கல்லூரி துணைப் பேராசிரியர் திரு. B. பாஸ்கரன் அவர்கள் | 10—00 |
| 20. | ஸ்ரீவைகுண்டம் | திரு. நமசிவாயம் பிள்ளை அவர்கள் | 5—00 |
| 21. | ,, | K G S கலைக்கல்லூரி திரு. V. சுப்பிரமணியம் அவர்கள் | 5—00 |
| 22. | ,, | திரு. S. சுவாமிநாத ஓதுவார் அவர்கள் | 5—00 |
| 23. | காஞ்சிபுரம் | திரு. கா. சு. ஏகாம்பரமுதலியார் அவர்கள் | 5—00 |
| 24. | ,, | திரு. S. N. தணிகாசலம் அவர்கள் | 5—00 |
| 25. | ,, | ரெவின்யூ ஆபீஸர் திரு. J. வீரபத்திரன் அவர்கள் | 5—00 |
| 26. | ,, | திரு. குருசாமிப் பிள்ளை அவர்கள் | 5—00 |
| 27. | இக்கனூர் | திரு. S அங்கண்ணன் அவர்கள் | 5—00 |
| 38 | சென்னை | திருவாதிரையான் திருவருட்சபை | 4—60 |
| 29. | ஸ்ரீவைகுண்டம் | திரு S V. கிருஷ்ணபட்டர் அவர்கள் | 3—00 |
| 30. | ,, | திரு. கோஷ் மூப்பனார் அவர்கள் | 1—00 |

3—4—81 வரை கூடுதல் ரூ. 9641—60

---

# இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

## இருமல்

(அ) காலையில் எலுமிச்சம்பழ சாற்றை வெந்நீரில் இட்டு சிறிது சர்க்கரையோ அல்லது உப்போ சேர்த்து சாப்பிட்டுவருவது நல்லது. இதனால் எல்லா அவயவங்களுக்கும் அனுகூலம் ஏற்படும்.

## அடிபட்ட வீக்கம்

(ஆ) எலுமிச்சம் பழம் சாறும் நல்லெண்ணெயும் சமமாக எடுத்து வீக்கத்தின்மேல் தடவ வீக்கம் குறைந்து குணம் ஏற்படும்.

## இதய வலிக்கு

(இ) எலுமிச்சம்பழ சாறைகொண்டு ரோஜா மொக்குத் தூள்' சந்தனத்தூள், ஜாதிக்காய்த்தூள் வகைக்கு ஒரு ரூபாய் எடை காவிக்கல் 1 விராகன் எடை கூட்டி கலக்கி வைத்துக்கொண்டு வேளைக்கு ஒரு ரூபாய் எடை தினம் ஒரு வேளை புசித்துவர இதய பயம், நெஞ்சுதுடிப்பு இவைகள் நீங்கும்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

பல உயிர்க் கூட்டங்களும் பயன் பெற வேண்டும் உய்தி பெற வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் ஒரு பழ மரம் வளர்த்தார். பெரிய நிலம். அதன் நடுவில் இந்த மரம் வளர்க்கப் பெற்றது. சுத்தமாயை என்பது அந்தவயல். வேதம் என்பது அந்த மரம். அருள் என்ற விதையிலிருந்து அந்த மரம் வளர்க்கப் பெற்றது. அதன் வளர்ச்சிக்குப் பாய்ச்சிய நீர் கருணைநீர்.

அருளை விதையாகவும், கருணையை நீராகவும் கூறியிருப்பதால் அருளுக்கும் கருணைக்கும் வேறுபாடு உண்டு என உணர வேண்டும். அருள் அன்பின் பெருக்கம். இச்சொல்லைக் கருணை என்னும் சமஸ்கிருதத்திற்கு மொழிபெயர்ப்பாக நாம் கையாண்டு வருகிறோம். இது ஓர் ஏகதேசமான மொழிபெயர்ப்பே ஆகும். இரக்கம் அடைந்து செயற்படாமல் இரங்குதலோடு நின்றாலும் அது அருளின் பகுதியாகும். இரக்கம் அடைந்து முற்ற நிவர்த்திக்கும் செயலூக்கமே கருணை ஆகும்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்கள் வளர்த்த வேதம் என்னும் மரத்தில் இலை, தளிர், அரும்பு, மலர், பிஞ்சு, காய், கனி யாவும் தோன்றின.

சிலர் இலையை மட்டும் பறித்து எடுத்துக் கொண்டு மகிழ்ந்தனர். வேதத்தைப் படித்ததோடு நின்றவர்களை இப்படிச் சொல்லலாம்.

இன்னும் பலர் தளிரை மட்டும் பறித்து எடுத்துக் கொண்டு மகிழ்ந்தனர். வேதத்தின் சில பகுதிகளின் பொருளை மட்டும் அறிந்தவர்களை இப்படிச் சொல்லலாம்.

மேலும் பலர் வேதமரத்தில் தளிரை நீக்கி அரும்பை எடுத்துக் கொண்டு வந்தார்கள். வேத நோக்கத்தை அறிந் தவர்கள் என்று இவர்களைச் சொல்லலாம்.

மற்றும் பலர் பிஞ்சை எடுத்துக் கொண்டு வந்தார்கள். வேத மையத்தைக் கண்டவர்கள் என்று இவர்களைச் சொல்ல லாம்.

வேறு பலர் வேதமரத்தின் அருமையான காயை விரும்பிப் பறித்துக் கொண்டு மகிழ்ந்தார்கள். வேதத்தின் தாத்பர்யத்தைக் கண்டு பிடித்தவர்கள் என்று இவர்களைச் சொல்லலாம்.

வேதத்தின் ஆறு அங்கங்களையும் தனித்தனியாகப் படித்தவர்கள் என்று மேலே கூறிய ஆறு வகையினரைக் கூறலாம்.

வேதமரத்தின் உச்சியில் பழம் பழுத்திருந்தது. அந்தப் பழம் முடிவில்லாத சுவையை அளிக்கும் அற்புதப்பழம். சிலர் மட்டும் அந்தக் கனியைக் கண்டு கொண்டார்கள். வேதமரத்தின் உச்சியில் ஏறி அதைக் கைப்பற்றினார்கள். அந்தப் பழத்தைக் கீழே கொண்டு வந்து சாறாகப் பிழிந் தார்கள். அது தேனமுதாக இனிக்கக் கூடிய சாறு. அதை அருந்தினார்கள்.

அந்தச் சாறுதான் - அந்த வேதமரக்கனியின் சாரம் தான் சைவ சித்தாந்தம் என்பது. இந்தச் சாரம் அருந் தியவர்கள் அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகிய நன் னிலை பெறுவார்கள்.

இப்படி ஒரு விளக்கம் சொன்ன பிறகு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மேலும் ஒரு செய்தியைத் தெரிவித்தருளுகிறார் கள்.

''சைவ சித்தாந்தத் தேனமுது அருந்தியவர்கள் பெறும் நன்னிலையை நான் பெறுவதற்கு இயலாது. நான் அன்னியன். ஆனால் இன்னுமொரு சுலபமான வழி எனக்குத் தெரியும். உன் அடியவர்கள் அந்தத் தேனமுதை அருந்தியவர்கள். அவர்களின் தாமரைக்கொப்பான பொன்னடிகளைக் கழுவி, அந்த இனிய நீரை பக்தியினால் நான் அருந்தியிருக்கிறேன். அதற்குப் பிறகு தேவாமிர்தமும் எனக்கு வேம்பாகி விட்டது'' என்று பக்தி வீரம் ததும்ப விளக்கியருளுகிறார்கள்.

பல்லுயிர்த் தொகுதியும் பயம்கொண்டு உய்கஎனக்
குடிலை என்னும் தடவயல் நாப்பண்
அருள்வித்(து) இட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேதம் என்னும் பாதவம் வளர்த்தனை
பாதவம் அதனில் படுபயன் பலவே,
அவற்றுள்
இலைகொண்(டு) உவந்தனர் பலரே இலைஒரீஇத்
தளிர்கொண்(டு) உவந்தனர் பலரே: தளிர் ஒரீஇத்
அரும்பொடு மலர்பிஞ்சு அரும்காய் என்(று) இவை
விரும்பினர் கொண்டு கொண்(டு) உவந்தனர் பலரே
அவ்ஆ(று) உறுப்பும் இவ்வாறு பயப்ப
ஒரும் வேதாந்தம்என்று உச்சியில் பழுத்த
சாரம் கொண்ட சைவசித் தாந்தத்
தேன்அமு(து) அருந்தனர் சிலரே ஆனவர்
நன்னிலை பெறுதற்கு அன்னியன் ஆயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கிஅத்
தீம்புனல் அமுதம் ஆர்ந்தனன் அதனால்
வேம்புஎனக் கொண்டனன் விண்ணவர் அமுதே.

[உயிர்த்தொகுதி-உயிர்களின் கூட்டம்; பயம்-பயன்; குடிலை-சுத்தமாயை; தடம்-பெரிய; நாப்பண் - நடுவில்; வித்து-விதை; பாதவம்-மரம்; படுபயன்-தோன்றும் பயன்; ஒரீஇ-நீக்கி; பயப்ப-பயன் கொடுக்கவும்; ஒரும்-ஆராயும்; அந்தம்-முடிவு; ஆரா-குன்றாத; ஆனவர்-அப்படிப்பட்டவர்; அன்னியன்-வேற்றவன்; கமலம்-தாமரை; விளக்கி-கழுவி; தீம்புனல்-இனியநீர்; ஆர்ந்தனன்-உண்டேன்; விண்ணவர்-தேவர்.]

— சிவ சிவ

உ

சிவ சிவ

# சுசிந்திரம் ஸ்ரீ தாணுமாலயசுவாமி தேவஸ்தானத்தில்

# சித்திரைத் திருவிழா தேவார கோஷ்டி

கன்னியாகுமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள்.

திருமுறை அன்னம்பாலிப்பு வகையரு நிதியின்படி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

11—5—81 முதல் 13—5—81 முடிய

திருமுறைவாணர்கள் :—

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

1. திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்
   திருவாவடுதுறை
2. திரு. T. தம்பையா ஓதுவார்
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், சுசீந்திரம்.
3. திரு. S. A. கோபாலன்
   வேய்ங்குழல், சிதம்பரம்.
4. திரு. கோ. வெங்கட்ராமன்
   மிருதங்கம், திருப்பனந்தாள்.

உத்திரவுப்படி,

பா. கனகசபாபதி பிள்ளை,

ஏஜண்டு, ஸ்ரீ காசிமடம், ஆச்சிராமம்.

# 32 டௌ கடல் போலிருக்கிறது[1]

## தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

டௌ எல்லையற்றது, முழுமையானது, வேறு சார்பற்றது,
அதற்கு யாதொரு பெயரும் இல்லை
பொள்ளப்படாத மரத்துண்டு சிறியதாயிருப்பினும்
அதை யாராலும் (ஒரு கலமாக) பயன்படுத்தமுடியாது.
அரசர்களும் பிரபுக்களும் இந்தக் கெடுக்கப்படாத தன்மையை
நிலையாக வகிக்க முடியுமானல்
உலகம் முழுவதும் தானே அவர்களுக்கு ஆட்சிப்
பதவியை அளித்து விடும்.
வானமும் பூமியும் கூடுகின்றன,
இனிய மழை பெய்கின்றது,
மனிதர்களுடைய ஆணைக்கு உட்படாமல்
ஆயினும் அனைவர் மீதும் சமமாகப் பெய்கின்றது.
மனித நாகரிகம் தலைப்பட்டது,
உடனே பெயர்கள் உண்டாயின.[2]
பெயர்கள் உண்டாயினவே,
எங்கே நிறுத்துவது என்று அறிந்திருந்தால்
நன்றாயிருந்திருக்கும்.
எவனொருவன் எத்துடன் நிறுத்தவேண்டுமென்று
அறிகின்றானோ
அவன் அபாயத்திலிருந்து விலக்காயிருக்கலாம்.
பூமியில் நிலவும் டௌவைக்
கடலில் பாயும் நதிகளுடன் ஒப்பிடலாம்.[3]

---

1. இந்த அதிகாரம் முன்னமே 28 ஆம் அதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள ''மனிதனின் பழுதுபடாத இயல்பைக் காப்பது'' என்ற கருத்தையே மீண்டும் வற்புறுத்துகிறது. ஆகையால் இவ் வதிகாரம் 28 ஆம் அதிகாரத்துடனும், பின் வரவிருக்கும் 37 ஆம் அதிகாரத்துடனும் சேர்த்துப் படிக்கப்படவேண்டும்.

2. பெயர்கள் சுட்டறிதலை உணர்த்துகின்றன. டௌவின் ஆதி நிலைமை சேடுறுதலைக் குறிக்கின்றன.

3. சொல்லப் போனல், கடலுடன் ஒப்பிடலாம், அல்லது கடலில் அமைதியை நாடிப்புகும் நதிகளுடன் ஒப்பிடலாம்.

உ
சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

A String of verses on Chidambaram
By Kumaragurupara Swamigal
Translated into English by K. M. Venkataramiah.

66

-தரவு-

மறைதங்கு திருமன்றில் நடங்கண்டு மகிழ்பூத்துக்
கறைதங்கு படஅரவம் இமையாது கண்விழிப்பக்
குறைதங்கு கலைநிறையில் கோள்இழைக்கும் கொல்என்று
நிறைதங்கு தலைஉவவு நிரம்பாது நிரப்புஎய்தும்
பிறைதங்கு சடைக்கற்றைப் பெரும்பற்றப் புலியூரோய்!

At the Holy Hall where the Vedas abound,
Witnessing the Dance and feeling joy,
The hooded - poisonous - snake (patanjali)
without winking, sees
The cresent if it should grow,
Thinking the make would catch it,
The moon does not grow in full.
Oh Lord of Perumpatrappuliyur,
Having the decaying moon at the matted look!
எனவாங்கு - (exptetive)

- தாழிசை -

க. வெள்எருக்கும் கரும்பாம்பும் பொன்மத்தும் மிலைச்சிஎமது
உள்இருக்கும் பெருமான்! நின் திருமார்பின் உற அழுத்தும்
கள்இருக்கும் குழல்உமையாள் முலைச்சுவட்டைக் கடுஒடுங்கும்
முள் எயிற்ற கரைஅரவம் முழைஎன்று நுழையுமால்.

Oh Lord wearing the white "ERUKKU" the black snake and the golden thorn apple (ஊமத்தம்) flower!
You reside within my mind!
Uma has tresses exuding honey;
she pressed her breasts in your chest!
In the Cavity formed by her breasts,
The black snake having sharp fangs,
Enter as if it were a cavern!

அதாஅன்று - not only that

உ. சிலைக்கோடு பொருமருப்பில் புகர்முகன்நின் திருமார்பில்
முலைக்கோடு பொருசுவட்டைக் கண்டுநின் முழவுத் தோள்
மலைக்குழுடி விளையாடும் பருவத்து மற்றுத்தன்
கொலைக்கோடு பட்ட எனக் குலைந்துமனம் கலங்குமால்.

# புத்தாண்டுப் பிறப்பு

ஜோதிஷம். A. இராசமாணிக்கம்
திருப்பனந்தாள்.

வாரம், திதி, நக்ஷத்திரம், மாதம், ஆண்டு, பரிவர்த்தி, சதுர்யுகம் இவை திரும்பத்திரும்ப நிகழ்வதின் கிரமத்தை நமக்கு நம் மூதாதையர்களால் சாஸ்திரமாக வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு சதுர்யுகத்தில் இப்பொழுது நடப்பது கலியுகம். கலியுகமானது தேவ ஹூ 1200 கொண்டது. அது மனுஷஹூ 432000 ஆகும். அதில் தற்காலம் கதகலிஹூ 5082 வர்த்தமான சேஷகலிஹூ 426918 என்று கணக்கின்படி ஆகிறது. பிரபவஹூ முதல் அக்ஷய வருஷம் முடிய உள்ள 60 ஹூங்களுக்கும் ''ஒரு பரிவர்த்தி'' என்று பெயர். கத கலியுகாப்தத்தில் அதாவது 5082 ஹூங்களில் 3527 ஹூங்களைக் கழித்து மீதம் உள்ள வருஷங்களை 60 ஆல் வகுத்துவந்த ஈவு சென்ற பரிவர்த்திகளாகும். மீதமாகிய ஹூ பிரபவாதியாக வருகிற வருஷமாகும்.

அதாவது $5082-3527=1555 \div 60=$ ஈவு 25 மீதம் 55 ஆகிறது; ஆகவே 25 பரிவர்த்திகள் சென்று 26வது பரிவர்த்தியில் 55 ஆம் ஆண்டு துன்மதி ஹூ பிறக்கிறது.

ஒவ்வொரு வருஷத்திலும் அவ்வருஷத்தில் உட்பட்ட காலத்தில் வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்கிற ஐந்து அங்கங்களையுடைய காலத்தினை நம் மூதறிஞர்கள் வகுத்துள்ளனர். இதை 'பஞ்சாங்கம்' என்பர்.

அவற்றில் முக்கியமாக சுப வாரம் சுப திதி சுப நக்ஷத்திரம் கூடிய தினத்தில் சுபலக்கினம் சுப பல கிரகநிலை இவை பார்த்து நல்லகாரியங்களை நடத்தவேண்டியது அவசியமாகும்.

சுபகிரகத்தின் பெயரில் உள்ள வாரம் அதாவது திங்கள், புதன், வியாழன், வெள்ளி இந்த வாரங்களில் நல்ல காரியங்களைச் செய்ய சிறப்புறும்.

கொடிய கிரக வாரங்களாகிய ஞாயிறு செவ்வாய் சனி இக்கிழமைகளில் ஞாயிற்றுக்கிழமை அக்கினி சமமானது; செவ்வாய்க்கிழமை கலகம் இடையூறுள்ளது; சனிக்கிழமை மந்தமும் கஷ்டமும் உள்ளது. ஆகவே இவ்வாரங்கள் நீக்கி சுபவாரம் முக்கியமாய் பார்க்கவேண்டும்.

திதிகளில் அமாவாசை பௌர்ணமி இத்திதிகளின் முன்பின் திதிகள் சூரியன் சந்திரனல் ஒளி மங்குதல் உடையவையாகிறது. அத்திதிகளில் காரியம் தொடங்கினல் க்ஷீணமுறும். சதுர்த்தசி, அஷ்டமி, நவமி 'இருத்தை திதிகள்' எனப்படும். இருத்தை தேவதை மிகக்கொடியது. அத்திதிகளில் தொடங்குகின்ற காரியங்கள் பூர்த்தி யடைதலின்றி சிதறுண்டு விக்கினமாகும். அதனல் அத்திதிகளை சுப காரியங்களுக்கு நீக்கி துதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி ஆகிய சுபமான திதிகளை சுப முகூர்த்த விசேஷங்களுக்கு சேர்க்கப் படுவதாகின்றன.

அசுவதியாதி நக்ஷத்திரங்கள் 27ல் தீதுரு நக்ஷத்திரம் 12 உள்ளது:

''ஆதிரை பரணி கார்த்திகை ஆயில்யமுப் பூரம் கேட்டை
தீதுரு விசாகம் சோதி சித்திரை மகம் ஈராறில்
மாதனங் கொண்டார் தாரார் வழிநடை போனர்மீளார்
பாயினிப் டுத்தார் தேருர் பாம்பின் வாய்த் தேரைதானே!''

என்று தீதுரு நக்ஷத்திரங்களின் கொடுமை கூறப்பட்டதினின்றும் இந்நக்ஷத்திரங்கள் நீங்க உள்ள நக்ஷத்திரங்கள் 15ம் சுப முகூர்த்தங் களுக்கு ஏற்றதாகக் கொள்கின்றனர்.

இப்படியாக பெரியோர்கள் செய்கின்ற வழியில் சுபவாரம் சுப திதி சுப நக்ஷத்திரம் பார்த்து சுப லக்கினம் சுபமான கிரக நிலை இவற்றையும் விதிப்படி கண்டு காரியம் செயல்படுத்த நன்மையும் விருத்திகரமும் ஏற்புடும்.

இப்புத்தாண்டின் பலனக இடைக்காடர் இயற்றியருளிய துன்மதி வருஷப் பலன் வெண்பாவில்:

'' துன்மதியின் மாரியற்பஞ் சோகமுறுங் கீழ்ச்சாதி
நன்மையில்லை மத்தியநன் ஞடுதனில் — உண்மையாகக்
கொண்டுதுங்க பத்ரிமுதற் கோதா விரியளவும்
விண்டுபஞ்ச மாகி விடும்''.

என்று நம் பாரத பூமியில் துங்கபத்ரி நதி முதல் கோதாவரி நதி வரையில் உள்ள பிராந்தியத்தில் துர்பிட்சம் நிலவும் எனக் குறிப்பிட் டிருப்பினும் உலகில்அந்த அக்ஷராம்ஸம் உள்ள எல்லா இடங்களிலுமே அவ்வித நிலைமை ஏற்படும் என கொள்ளவேண்டியது.

இவ் உலகம் நீடித்தலானது சிவனடியார்களும் தர்ம சீலர்களும் இப்பூவுலகின்கண் ஆங்காங்கு இருப்பதால் ஆகும். அவர்கள் பொருட்டு இறைவன் அருள்பாலித்து இப்புத்தாண்டாகிய துன்மதி ஞூத்துக்கு வான மண்டலத்தில் நவநாயகர்களை ஏற்படுத்தி இரட்சிக்கின்றூர்.

இத்துன்மதி ஞூத்துக்கு இராஜா சூரியன்; மந்திரி சந்திரன்; சேனுதிபதி சந்திரன்; அர்க்காதிபதி சந்திரன்; மேகாதிபதி சந்திரன்; ரஸ்யாதிபதி குரு; தான்யாதிபதி புதன்; ரசாதிபதி சனி; நீராதிபதி குரு ஆகிறூர்கள்.

இந்த நவநாயகர்கள்தான் உபநாயகர்களாகவும் பரிமளித்து லோக ஜீவர்களை இரட்சிப்பவர்கள் ஆகிறூர்கள். இவர்களில் சஸ்யாதிபதியாகிய குருபகவான் பிரஜைகளின் க்ஷேமத்திற்கு அதிபதியாகி அருள்பாலித்து வருவார். இவ்விதம் இறைவனருள் இருப்பதால் இவ் உலகில் ஒவ்வொருவரும் சிவாலயம் சென்று சிவதரிசனம் செய்தும் பூஜித்தும் வரவேண்டும். அதனுல் துயர் நீங்கப்பெற்று நல்வாழ்க்கை நடத்த ஈசனருள் ஏற்படும்.

## நமக்கு நல்லது

உங்கள் ஜன்ம நட்சத்திரம் வரும் நாளில் ஆண்டுதோறும் உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள் பெயர், முகவரி, பிறந்த மாதம் (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரூ. 110-க்கான காசோலையும் அனுப்புங்கள். ஆண்டுதோறும். அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம், கதிராமங்கலம் **ஸ்ரீவனதுர்க்கா பரமேஸ்வரிக்கு** அபிஷேக அர்ச்சனை செய்து பிரசாதம் உங்கள் முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கு ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங்கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்க வேண்டும். இந்தத் திட்டத்தில் நீங்கள் பங்குகொள்ள விரும்பும் விருப்பத்தின் வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப் பொருத்தது. தொகையும் விவரங்களும் அனுப்ப வேண்டிய முகவரி:-

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

**************************

# மலைவளர் காதலியம்மன் பேரில் கலித்துறைப் பதிகம்

**************************

1. மணிகொண்ட சொன்னக் கிரீடமுஞ் சோதி மதிமுகமும்
பணிகொண்ட கண்டமுஞ் செங்கையுங் கொங்கையும் பட்டுடையு
மணிகொண்ட பாதமு நான்றெழ முன்வந் தருள்புரிவாய்
கணிகொண்ட தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

2. பூமேவு வேதனு நாரா யணனும் புராந்தகனுந்
த மேவு மிக்க மகேசனு மோங்குஞ் சதாசிவனு
......... மன்றே தொழிலைந் தினிலமை பெற்றார்
காமேவு தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

3. சீராரும் வேணி யிராமீசர் பாகத்து நீதி .........
தேராருந் தேர்ந்து தொழுதுய்யு முண்மை தெளிவித்தனை
யேராரு மேடை கண்மீதும் பொழிலினு மிஞ்சியினுங்
கா ராருந் தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

4. நான்மிகும் பாவி யெனினு நின்சன்னிதி நண்ணினனீ
......... ஈன்மிகு மன்புசெய் தாட்கொள்ள வேணுஞ் சரதமம்மா
தேன்மிகுஞ் சோலை திசைதொறுஞ் சூழ்ந்தெங்குஞ் சிந்துமலர்க்
கான்மிகுந் தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

5. ஆரணி நாரணி யெக்காலமுந் தணியா தபரி
பூரணி சீரணி செல்வத் திருத்தணிப் பூங்கடப்பந்
தாரணி வேளன்னை முக்கணி யென்னுள்ளந் தங்குசெக
காரணி தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

6. ...... வாழ்வு மளகையர் கோனிதிப் பொக்கிசமு
..... ந் தொண்டர்க்குச் சொந்த மன்றே வடியேன் கலியை
...... மப்படுத்தா தகெனம் பின்னின்னை முற்றுங்
...... தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

7. மண்கண்டத் தோங்குந் தனுக்கோடித் தீர்த்த மகிமையுநீள்
விண்கண்ட தேவர் பணிரா மலிங்க விமலரிடம்
பண்கண்ட வேதப் பொருணி யிருந்தருள் பாங்குமன்பர்
கண்கண்ட தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

8. பணம்புக விறு படைத்திறு மாந்த பசாசர்கடுற்
குணம்புக லாய்நம்பி வாடாமற் செல்வங் கொடுத்தருள்வாய்
மணம்புகழ் வாழ்வு தவந்தரும் சண்மலிந்து விண்ணோர்
கணம்புகழ் தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

9. ........ னன்பர்க் கிங்கேது துயர்பகையின்
வலியேது சென்மப் பிணியேது பாவ வசத்தனென்ற
வொலியேது சத்துருவே துசெயப்பெற் றுயர்வ தல்லா
கலியேது தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே

10. தேமலி கொன்றைச் சடையாரை நின்னைநின் செயக...கலை
நாமலி செஞ்சொற் கொடுபாடு மென்னை நனிபுரப்பாய்
பூமலி பொய்கைக் கரைகளெங் கெங்கும் புடைபரந்து
காமலி தேவைப் பதிவாழ் மலைவளர் காதலியே.

மலைவளர் காதலியம்மன் கலித்துறைப் பதிகம் முற்றும்.

# பிறவித்துயரை அறியாதவன்

கி. வா. ஜகந்நாதன்

"இறைவனே, நான் பல பிறவிகளை எடுத்துத் துன்புறுகிறேன். இதனை நீக்காமல் இருக்கிறாய். பிறப்பினால் உண்டாகும் துன்பம் உனக்குச் சிறிதும் தெரியாது. அதனால்தான் பிறவியினால் அல்லற்படும் என் துயரத்தை ஒழிக்கவில்லை போலும்" என்று குமரகுருபரர் சொல்கிறார். பாட்டின் கருத்து இது. இதை விரித்துச் சொல்கிறார்.

முதலில் திருவாரூரின் பெருமையை விரித்துரைக்கிறார். கமலையாகிய திருவாரூர் மருதநிலமாகிய வயல்கள் சூழ விளங்குவது. அங்கங்கே குளங்கள் இருக்கின்றன. குவளை மலர்கள் உள்ளன. எருமைகள் மேய்கின்றன. குளத்தின் நடுவில் தாமரை மலர்ந்திருக்கிறது. அதன் மேல் ஓர் அன்னம் அமர்ந்திருக்கிறது. இந்தக் காட்சியைக் காட்டுகிறார்:

எருமையின் கொம்புகள் படர்ந்திருக்கிறன. பெரிய பருத்த அந்தக் கொம்புகள் இரும்பினால் செய்தவை போலத் தோன்றுகின்றன.

கருந்தாது கடுக்கும் பெரும்பணை
தாங்கும்
படர்மருப்பு எருமை

அந்த எருமை குளத்தில் இறங்கி அங்கே உள்ள குவளைகளை மேய்ந்து மெல்லுகின்றன. வயிறு நிரம்பியிருக்கிற எருமையின் மடியிலிருந்து பால் தானே சுரந்து வழிகிறது. கறந்த பாலாக இன்றிச் சுரந்த பாலாக அது அருவி போல விழுகிறது. எருமை சிறு குன்றைப் போல இருப்பதனால் அதன் மடியிலிருந்து மடை திறந்தது போல வழிந்து வரும் பால் அருவிபோல இருக்கிறது.

பூக்கள் மலர்ந்த அந்தத் தடாகத்தில் பால் வழிந்து புனலோடு கலந்து கரையை மோதியடிக்கிறது. பாலினால் வெள்ளப் பெருக்கு எடுத்திருக்கிறது.

குவளைகுதட்டி
மடிமடை திறந்து வழிந்தபால் அருவி
கரைபொருது அலைப்பப் பெருகு பூந்
தடத்து

அந்தத் தடாகத்தில் பல தாமரைகளுக்கிடையே ஒரு

வெள்ளைத் தாமரை. வெண்மையான இதழ்களை விரித்த அந்தத் தாமரையாகிய இருக்கையில் நல்ல வெள்ளைநிறமுள்ள அன்னம் அமர்ந்திருக்கிறது. பாலும் நீரும் கலந்து பெருகிய அந்தக் குளத்தின் தண்ணீரில் உள்ள பாலையும் நீரையும் வேறுவேருகப் பிரித்துப் பாலை உண்ணுகிறது.

வெண்தோடு அவிழ்ந்த முண்டகத்
தவிசில்
பால்நீர் பிரித்துஉண் தூவெள் எகினம்

அந்த அன்னத்தைப் பார்த்தால், வெண்மையான ஆடையணிகளைப் பூண்டு வெண்ணிறத் தோடு வெள்ளைக் கமலத்தில் உறையும் நாமகளைப்போலக் காட்சியளிக்கிறது. பெரிய கடலைப் போல விரிந்துள்ள நூல்களில் உள்ள நுட்பமான பொருளை ஆராய்ந்து, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பயனையும் அடைபவள் நாமகள், நீரிலிருந்து பாலைப் பிரித்து உண்டு இன்புறும் அன்னம் நாமகளின் செயலை நினைப்பூட்டுகிறது.

நூற்பெருங் கடலுள் நுண்பொருள்
தெரிந்து
நாற்பயன் கொள்ளும் நாமகட்போருவும்

இத்தகைய வளம் உள்ள மெல்லிய திணையாகிய மருத நிலத்தில் குளிர்ந்த நீர்வளம் பொருந்தி விளங்குவது கமலாலயமாகிய திருவாரூர்.

மென்பால் மருதத் தண்புனற் கமலை
தியாகப்பெருமான்

அந்தத் திருத்தலத்தில் தியாகப்பெருமான் கோயில் கொண்டிருக்கிறுன். அந்தக் கோயிலுக்குப் பூங்கோயில் என்று பெயர். அது மிகவும் பெரியது; வடக்கே உள்ள மேருவைப் போலத் தென் திசையிலும் இந்த மேரு இருக்கிறது என்று சொல்லும்படி வனப்புடன் உயர்ந்து நிற்கிறது:

தென்பால் மேருவின் திகழ்பெரும்
கோயில்

அந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தியாகேசனைப் பிரம்ம விஷ்ணுருத்திரராகிய மூவரும் வந்து வழிபட்டுத் துதிக்கின்றனர். 'அகண்டமாக எங்கும் பரவியிருக்கும் மூர்த்தியே!' என்று துதித்துப் பரவுகிறுர்கள். அவருக்குத் தேவரகண்டன் என்பது திருநாமம். தெய்வங்களுக்கெல்லாம் நாயகன் அவன். அவனை விளித்துச் சொல்லப் புகுகிறுர். முனிவர்:

மூவர் அகண்டமூர்த்தி என்று ஏத்தும்
தேவர கண்ட! தெய்வ நாயக!

அடியார் உறவு

''எனக்கு நின் திருவடிக்குத் தொண்டு செய்யும் நிலையான பண்பு இல்லை; இதைநான் அறிவேன். உன்னை நேரே வந்து தொழுது வணங்குவதற்குரிய தகுதி எனக்கு இல்லை. என்றுலும் என்னிடம் வேருேர் இயல்பு இருக்கிறது. உன்னுடைய அடித்

தொண்டரை அடைந்து வணங்கி அவருடைய சார்பைப் பெற்று உய்ந்தேன்''.

நின்அடித் தொழும் பின் நிலைமைஇன்
றேனும்நின்
றன்அடித் தொழும்பர் சார்புபெற்று
உய்தலின்

'இறைவனுடைய அடியார்க்கு அடியேன் ஆகி உய்ந்தேன்' என்று சொல்கிறார். திருவாரூர்த்தலத்தில் தான் சுந்தரமூர்த்திநாயனார், 'நான் என்று அடியார்க்கு அடியேன் ஆவேனோ?' என்று வருந்தி, இறைவனே அடியெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டத் தொகையைப் பாடினார். ஆகவே அந்தத் தலத்தில் அடியார்க்கு அடியார் ஆவது பொருத்தமானது. ஆண்டவனுக்கு அடியானாக இருப்பதைவிடச் சிறந்தது அடியார்க்கு அடியானாக இருப்பது. ''அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால், இன்ப நிலை தானேவந்து எய்தும் பராபரமே'' என்று தாயுமானவர் பாடுகிறார்:

உன்கடன்

''இவ்வாறு நான் உன் அடியாருடைய சார்பைப் பெற்று என்வாழ்நாளின் பயனைப்பெற்றது உனக்குத் தெரியும். நான் சிறியவனானாலும் பெரியவர்களைச் சார்ந்து நிற்பதனால் என் துயரத்தைத் தீர்ப்பது உன்கடமை அல்லவா? நீ மிகமிகப் பெரியவன்; நானோ மிகச்சிறியவன். என்துயரமும் சிறிதுதான். அதை நீக்குவது உனக்கு அரிய செயல் அன்று, என் துயரத்தைத் தீர்ப்பது உன் கடன் என்று நான் சொல்ல வேண்டுமா? அதை அறியாதவன் அல்ல நீ''.

சிறியஎன் விழுமம் தீர்ப்பது கடன்என
அறியாய் அல்லை

அருள்நிலை

''நான்படும் துயரம் இன்னதென்று உனக்குத் தெரியுமே! ஒருகாலும் முடிவுறாமல் என்னை அறியாமலே வஞ்சகமாக என்னைப் பிணித்து வரும் தீமையையுடைய பிறப்புகளால் நான் அல்லற்படுகிறேன். அவை என்னைத் தமக்குள் அமுத்தி அலையச் செய்கின்றன. அதனால் நான் மிகவும் சோர்ந்து துயருறுகிறேன். இவற்றையெல்லாம் நீ அறியமாட்டாயா? அறிந்திருந்தும் நீ என் துயரை ஒழித்து அருள்புரியவில்லையே''.

அறிந்துவைத் திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப்பு அலைப்பச்
சோரா நின்றஎன் துயர்ஒழித் தருள்கிலை.

''நீ என்னைப் புறக்கணித்திருக்கிறாய். இப்படி உள்ள நின் பாராமுகத்துக்குக் காரணம் என்ன? யோசித்துப்பார்த்தேன்; உண்மை விளங்கியது. அதைச் சொல்லட்டுமா?''

புறக்கணித் திருந்ததை அன்றே
குறித்திடின்று

காரணம்

"நான் பிறந்து பிறந்து வருவது உனக்குத் தெரியும்; ஆனால் பிறவியினால் உண்டாகும் துன்பம் உனக்கு எள்ளளவும் தெரியாது. நீதான் பிறவாயாக்கைப் பெரியோனாயிற்றே. 'தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும்' என்பார்கள். அப்படி நீ பிறந்திருந்தால்தானே இந்தத் துயரம் அனுபவத்தில் உனக்குத் தெரிந்திருக்கும்? அந்த விஷயத்தில் பிரமன் முதலிய தேவர்கள் நின்னைவிட அனுபவம் உடையவர்கள். அவர்களுக்குப் பிறப்பின் துன்பம் நன்றாகத் தெரியும். காரணம், அவர்கள் பல பிறவிகளை எடுத்திருக்கிறார்கள். சிறந்த கொள்கையை உடைய முனிவர்களுக்குத் தீங்கு புரிந்த தேவர்கள் அவர்கள் சாபங்களுக்கு ஆளாகி வெவ்வேறு பிறப்புக்களை எடுத்திருக்கிறார்கள். புராணங்களைப் பார்த்தால் இது தெளிவாகப் புலப்படும். முனிவர்கள் இட்ட சாபத்தின் இயல்பால் அவர்கள் பிறந்து உடலைச் சுமந்து திரிந்தார்கள். அந்தச்சாபம் என்ற தீயினால் உண்டான வலிய பாவங்களின் தீய விளைவுகளை அனுபவிக்கும் பொருட்டு அந்தக் கடவுளர் பல பிறப்புக்களை எடுத்தார்கள். ஆதலால் அவர்களுக்குப் பிறவித் துயரம் தெரியும். உனக்கு அந்தத் துயரம் அனுபவித்து அறிவதற்கு அரிது. அதனால்தான் நீ என் பிறவிப்பிணியைப் போக்குவதற்கு அருள்புரிய வில்லை போலும்".

கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந்து உழலும் கடவுளர்க்கு அல்லதை
பிறவியின் துயர் நினக்கு அறிவரிது; ஆதலின்
அருளாது ஒழிந்தனை போலும்!

கருணை

இவ்வாறு சொல்லிவிட்டு இறைவனுடைய கருணையை நினைக்கிறார். கடைசியிலும் ஒரு விளியை அமைத்துப் பாட்டை முடிக்கிறார். "கருணையினால் எல்லாரையும் விடச்சிறந்து விளங்கும், நெற்றியிலே கண்ணை யுடைய பெருமானே!".

கருணையிற் பொலிந்த கண்ணுதலோயே!

அவன் யாருக்கும் இல்லாத நெற்றிக்கண்ணைப் படைத்தவன். அப்படியே யாரிடமும் காணமுடியாத கருணையை உடையவன். அவனுக்குப் பொலிவு அல்லது யாரும் அறியும் விளக்கம் உண்டானது அவனுடைய பராக்கிரமத்தால் அன்று; கருணையினால் தான். அதுவே அடியார்களுக்கு இன்பம் தருவதாதலின் அதைப் பெறவே யாவரும் நினைப்பார்கள்; அந்தக் கருணையே அவனை இனம் கண்டு கொள்ள உதவுகிறது.

கருந்தாது கடுத்த பெரும்பனை தாங்கும்
படர்மருப்பு எருமைபைங் குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்தபால் அருவி
கரைபொருது அலைப்பப் பெருகுபூந் தடத்து
வெண்தோடு அவிழ்ந்த முண்டகத் தவிசில்
பால்நீர் பிரித்துஉண் தூவெள் எகினம்
நூற்பெருங் கடலுள் நுண்பொருள் தெரிந்து
நாற்பயன் கொள்ளும் நாமகட் பொருவும்
மென்பால் மருதத் தண்புனல் கமலைத்
தென்பால் மேருவின் திகழ்பூங் கோயில்
மூவர் அகண்ட மூர்த்திஎன்று ஏத்தும்
தேவர் அகண்ட, தெய்வ நாயக,
நின் அடித் தொழும்பின் நிலைமையின் றேனும்நின்
றன் அடித் தொழும்பர் சார்புபெற்று உய்தலின்
சிறியஎன் விழுமம் தீர்ப்பது கடன்என
அறியாய் அல்லை; அறிந்து வைத்திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப்பு அலைப்பச்
சோரா நின்றஎன் துயர்ஒழித்து அருள்கிலை;
புறக்கணித் திருந்ததை அன்றே குறித்திடின்;
கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந்து உழலும் கடவுளர்க் கல்லதை
பிறவியின் துயர்நினக்கு அறிரிவத்; ஆகலின்
அருளாது ஒழிந்தனை போலும்;
கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே!

இரும்பை ஒத்த பெரிய பருமையைக் கொண்டு படர்கின்ற கொம்புகளையுடைய எருமையானது, பசிய குவளை மலரை மென்று, மடியாகிய மடை திறந்து வழியச்செய்த பாலாகிய அருவி, தன் கரையை மோதி அலைவீச, புனல்பெருகுகின்ற தடாகத்தில் வெள்ளை நிறமுடைய, இதழ்களை விரித்து மலர்ந்த தாமரையாகிய ஆசனத்தில் அமர்ந்து பாலையும் நீரையும் பிரித்துப் பாலைமட்டும் உண்ணும் தூய வெள்ளை நிறத்தையுடைய அன்னம், நூல்களாகிய பெரிய கடலில் உள்ள நுண்ணிய பொருள்களை ஆராய்ந்து, நான்கு பயன்களைக் கொள்ளும் நாமகளை ஒத்துத் தோன்றும் இடமாகிய, மெல்லிய திணையாகிய மருதநிலத்திலுள்ளதும் குளிர்ந்த நீர்வளம் பொருந்தியதுமாகிய கமலாலயம்

என்னும் திருவாரூரில், தட்சிண மேருவைப் போல விளங்கும் பூங் கோயிலில் எழுந்தருளியிருப்பவ னும்; மும்மூர்த்திகளும் அசண்ட மூர்த்தி என்று துதிக்கப் படுபவ னும் ஆகிய தேவரகண்ட, தெய்வ நாயகனே, கருணையினால் பொலிவு பெற்று விளங்கும் நெற்றிக் கண்ணை உடையவனே, நின் அடிக்குரிய தொண்டில் நிலைத்து நிற்கும் தன்மை எனக்கு இல்லாவிட்டாலும், நின்னுடைய திருவடித் தொண்டர்களுடைய சார்பைப் பெற்றுப்பயன் கொண் டதனால், என்னுடைய சிறிய துன்பத்தைத் தீர்ப்பது நின் கடமை என்று நீ அறியாதவன் அல்ல; அதனை அறிந்திருந்தும், முடியாமல் நின்று வஞ்சமுடைய தாய் உள்ள தீய பிறப்பு என்னை வருத்த, அதனால் சோர்வை அடைகின்ற என்னுடைய துயரை ஒழித்து அருளவில்லை! இவ்வாறு என்னைப் புறக்கணித் திருந்ததன் காரணத்தை எண் ணிப் பார்த்தால், குறிக்கோளை உடைய முனிவர்களின் சாபத் தின் நீர்மையால் உண்டான தீ யைப்போன்ற சுடுதலைப் பெற்ற வன்மையான பாவத்தின் தீய விளைவுகளை அனுபவிக்கும் பொருட்டுப் பிறவிகளையெடுத்து உடம்புகளைச் சுமந்து திரியும் அந்தத் தேவர்களுக்கு அல்லா மல், பிறவியினால் உண்டாகும் துயரத்தை நினக்கு அறிவதற்கு அரிது; ஆகையால், எனக்கு அரு ளாமற் போனாய் போலும்.

எருமையின் கொம்புக்கு இரும்பு உவமை; ''இரும்பியன் றன்ன கருங்கோட்டு எருமை'' (56 : 3) என்பது அகநானூறு. ''கருந்தாது கொல்லும் கருங் கைத்திண் கொல்லர்'' (சிதம்பரச் செய்யுட்கோவை, 20) என்று இம்முனிவரே இரும்பைக் கருந் தாது என வேறு ஓரிடத்தில் குறிப் பர். கடுத்த-ஒத்த. பணை-பருமை; மருப்பு-கொம்பு. பைங்குவளை- அப்போதுதான் போதாகியிருக் கும்குவளைமலர். குதட்டி-குதப்பி மடி மடை-மடியாகிய மடை; உருவகம். பால்மிகுதியாகச்சொரி தலின் அருவிபோலத் தோன்று கிறது. கரை-தடாகத்தின் கரை. அலைப்ப-அலை எறிய. தோடு-இதழ் எகினம்-அன்னம். '' அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே'' (நன்னூல்) என்ப ராதலின் 'நாற்பயன் கொள்ளும்' என்றார் எல்லையிறந்து பரந்து நிற்றலின் 'நாற்பெருங்கடல்' என்றார். மருதமும் நெய்தலும் மென்பால் எனப்படும்; பால்- திணை. பூங்கோயில் என்பது திருவாரூர்த் திருக்கோயிலுக்குப் பெயர்.

மூவர்-பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மூவர்; தொகைக் குறிப்புச்சொல். தேவர் அகண்ட – தேவர்களுக்கு மேலாக நின்று எங்கும் பரந்த

வன்; மகாதேவன். நிலைமை-நிலைமையாகத்தங்கும் இயல்பு; சார்பு—உறவு உய்தல்-பேறடைதல். அறிந்துவைத்திருந்தும்-அறிந்திருந்தும்; வைத்து என்பதற்குப் பொருள் இல்லை. 'அங்கே வைத்துப் பார்த்தேன்' என்று திருநெல்வேலிக்காரர்கள் பேசுவார்கள். இந்த ஆசிரியர் அந்தப் பகுதியைச் சார்ந்தவராதலின் அந்தச் சொல்லைவைத்துச் சொன்னூர்.

வஞ்சம் என்றது தம்மை அறியாமல் வந்து துன்புறுத்திடதை எண்ணிச் சொன்னது. சோராநின்ற - இளைப்பை அடைகின்ற; ''எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான்'' என்று மாணிக்க வாசகர் கூறியது காண்க. அன்றுஏ; அசை நிலைகள் குறித்திடின்-எண்ணினுல், சொன்னுல். கோள்-குறிக்கோள்; லட்சியம். சாபநீர்—சாபத்தின் தன்மையால், அந்தச் சாபம் தவருமல் பலிக்கும் தன்மையுடையது. கொண்மார்-கொள்ளும் பொருட்டு. அக்கடவுளர் என்ற சுட்டு, உலகறி சுட்டு. அல்லதை -அல்லது; ஐ: சாரியை: அறிவு அரிது-அறிதல் அரிது; அருமை,இன்மையைக் குறித்தது. ''பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம் பிள்ளை பெறுப்பேதை அறிவாளோ'' (தாயுமானவர் பாடல்) என்பது போலப் பிறந்திருந்தால்தான் அதனுல் விளையும் துயர் தெரியும்; நீ பிறப்பவன் அல்லன் ஆதலின் உனக்கு அந்தத் துயரம் தெரியாது என்றுர்.

தேவர் அகண்ட, தெய்வ நாயக, கண்ணுதலோயே, அறிவாயில்லை இருந்தும் அருள்; கிலை;குறித்திடின் பிறவியின்துயர் அறிவரிது; ஆதலின் ஒழிந்தனை போலும் என்று கூட்டிப் பொருள் உரைக்க.

இதனுல் இறைவன் பிறப்பிலி என்றகருத்துச் சொல்லப்பட்டது.

இது திருவாரூர் நான்மணி மாலையில் வரும் 17 - ஆவது செய்யுள்.



# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்.

துன்மதி ஞு சித்திரை மீ (1981 ஏப்ரல்—மே)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்௳ | ஆங்கிலம்௳ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (13—4—81) | திங்கள் | தசமி 28-49 | ஆயில்யம் 27-56 |
| 2 | (14—4—81) | செவ்வாய் | ஏகாதசி 29-52 | மகம் 29-34 |
| 3 | (15—4—81) | புதன் | துவாதசி, நாள் முழுவதும் | பூரம் நாள் முழுவதும் |
| 4 | (16—4—81) | வியாழன் | துவாதசி 7-21 | பூரம் 7-38 |
| 5 | (17—4—81) | வெள்ளி | திரயோதசி 9-10 | உத்திரம் 10-00 |
| 6 | (18—4—81) | சனி | O சதுர்த்தசி 11-14 | அஸ்தம் 12-38 |
| 7 | (19—4—81) | ஞாயிறு | பௌர்ணமி 12-9 | சித்திரை 15-24 |
| 8 | (20—4—81) | திங்கள் | பிரதமை 15-51 | சுவாதி 18-19 |
| 9 | (21—4—81) | செவ்வாய் | துதியை 18-17 | விசாகம் 21-16 |
| 10 | (22—4—81) | புதன் | திரிதியை 20-42 | அனுஷம் 24-12 |
| 11 | (23—4—81) | வியாழன் | சதுர்த்தி 22-58 | கேட்டை 26-59 |
| 12 | (24—4—81) | வெள்ளி | பஞ்சமி 24-58 | மூலம் 29-29 |
| 13 | (25—4—81) | சனி | சஷ்டி 26-32 | பூராடம் நாள் முழுவதும் |
| 14 | (26—4—81) | ஞாயிறு | சப்தமி 27-31 | பூராடம் 7-32 |
| 15 | (27—4—81) | திங்கள் | அஷ்டமி 27 46 | உத்திராடம் 9-00 |
| 16 | (28—4—81) | செவ்வாய் | நவமி 27-13 | திருவோணம் 9-44 |
| 17 | (29—4—81) | புதன் | தசமி 25-51 | அவிட்டம் 9-40 |
| 18 | (30—4—81) | வியாழன் | ஏகாதசி 23-42 | சதயம் 8-48 |
| 19 | (1—5—81) | வெள்ளி | துவாதசி 20-52 | பூரட்டாதி 7-10<br>உத்திரட்டாதி 28-55 |
| 20 | (2—5—81) | சனி | திரயோதசி 17-30 | ரேவதி 26-11 |
| 21 | (3—5—81) | ஞாயிறு | ● சதுர்த்தசி 13-45 | அசுவனி 23-09 |
| 22 | (4—5—81) | திங்கள் | அமாவாசை 9-49 | * பரணி 20-01 |
| 23 | (5—5—81) | செவ்வாய் | பிரதமை 29-53<br>துதியை 26-10 | கிருத்திகை 16-59 |
| 24 | (6—5—81) | புதன் | திரிதியை 22-48 | ரோகணி 14-15 |
| 25 | (7—5—81) | வியாழன் | சதுர்த்தி 19-59 | மிருகசீரிஷம் 12-00 |
| 26 | (8—5—81) | வெள்ளி | பஞ்சமி 17-51 | திருஆதிரை 10-23 |
| 27 | (9—5—81) | சனி | சஷ்டி 16-27 | புனர்பூசம் 9-30 |
| 28 | (10—5—81) | ஞாயிறு | சப்தமி 15-52 | பூசம் 9-24 |
| 29 | (11—5—81) | திங்கள் | அஷ்டமி 16-03 | ஆயில்யம் 10-04 |
| 30 | (12—5—81) | செவ்வாய் | நவமி 16-56 | மகம் 11-26 |
| 31 | (13—5—81) | புதன் | தசமி 18-23 | பூரம் 13-23 |

# வள்ளலாரின் சீற்றம்

எம். கே. பாலசுப்பிரமணியன், ஐ. ஏ. எஸ்.

வடலூர் வள்ளலார் அன்பின் வழியில் வாழ்ந்தவர். உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் ஆண்டவனின் வடிவங்கள் என்பதைக் கண்ட அவர் "உலகெலாம் ஒருநீ" எனப்போற்றி ஆண்டவனை வணங்குபவர். உயிர்களிடத்தில் அன்பு செலுத்தாதவர்களை அவர் இலேசில் விடுவதில்லை. அன்போடு அமைந்து ஆளாத அரசையும் சாடத்தயங்க மாட்டார். "கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக" இஃது ஐயா அவர்களது உள்ளக்கிடக்கைக்கு ஓர் எடுத்துக்காட்டு

ஒரு நாள் மாலை நேரம் வள்ளலார் வெளியில் உலாவச் செல்கிறார். அப்போது 'மே' 'மே' 'மே' என்று அலறும் சத்தம் காதில் விழுகிறது. அன்புருவாம் அய்யா அவர்கள் சும்மா இருப்பாரா! சப்தம் வந்த திசையை நோக்கி ஓடுகிறார். அங்கே ஒரு சிறிய கோயில். வெம்மை நிறைந்தது. 'ஆன்மலயம்' இருப்பதற்குப் பதில் ஆன்ம பயம் தோன்றுகிறது. அவர் கண்ட காட்சி அவர்மனதை உருக்கியது. 20 வயது நிரம்பிய ஒரு பெண் அங்கு நிலைகுலைந்து நிற்கின்றாள். அவள்கழுத்தில்தாலி இல்லை. திருமண வயது நிரம்பியும் இன்னும் திருமணம் ஆகவில்லை போலும்! நிலைகுலைந்து நின்றஅவளது தலைமயிர்அவிழ்ந்து கிடந்தது. அவள் பார்க்கும் பார்வை வெறிச்சோடிக் கிடந்தது. அவளைச்சுற்றி ஒரு சிறிய கூட்டம். அவளுக்குப் பேய் பிடித்து இருப்பதாக அவளது பெற்றோர்நினைக்கிறார்கள். பிடித்த பேய் ஓட்டப்பட வேண்டுமல்லவா? அதற்காகத்தான் புனிதப் பணி நடக்கிறதாம்! அச்சிறு கோயிலில் தன் மகளுக்கு நேர்ந்த வேதனையைத் தீர்க்கப் பெற்றோர் நடாத்தும் பூசையாகும். தனது பெண்ணைஏதோ ஒருபூதம்பிடித்து இருப்பதாக நினைவு. காட்டேரி போன்ற துர்தேவதைகளின் சேஷ்டையாகக் கூடஇருக்கலாம். அந்தக் கோயிலில் அமர்ந்து இருக்கும் அம்மையோ அன்னை பத்திர காளி. அவளுக்கு ஓர் ஆட்டைப் பலி கொடுத்தால் தன் மகளைப் பிடித்துள்ள துர்தேவதைகள் விலகும். தன் ஆசை நிறைவேறும். மகள் நன்மை பெறுவாள். உயிர்ப் பலி கொடுப்பதற்குக் கொண்டு வந்து கட்டப்பட்டுள்ள ஆட்டுக்கிடா தனக்கு என்ன நேரப்போகிறது என்பதை அறியாமல் நிற்கிறது! அதன் உடலுக்குப் புனித நீராட்டு. கழுத்திலோ மணம்

காலமும் மாலை. அக்கோயில் பூசாரியோ ஒரு சூரியவாளைக் கையில் ஏந்தி வெட்டுவதற்குத் தயாராக நிற்கிறார். அப்பொழுதுதான் தன்னை விறைக வெட்டி வீழ்த்தப் போகிறார்கள்என்பதைஉணர்ந்தோ என்னவோ ஆட்டுக்கிடா தனக்கே உரித்தான வேகத்துடன் 'மே' 'மே' 'மே' என்று கத்துகிறது.

இதைக்கண்டு வள்ளலார் பொருமுகிறார். அவருக்குக் கோபம் கொப்பளிக்கிறது - இது என்ன அநியாயம்! அகில உலகத்தையும் ஈன்ற அன்னை பத்திரகாளியா உயிர்ப்பலி கேட்கிறாள்? அந்த அறிவிலிகளுக்கு ஒன்றும் தெரிய வில்லையா? இப்பெண்ணோ காம வேதனையால் வருந்துகிறாள். இவளுக்கு ஏற்றகணவனைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து வைப்பதே முறை. அதுதான் அவளது நோய் தீர்ப்பதற்கு ஏதுவாகும். அங்ஙனம் செய்வதை விட்டு அவளுக்குப் பேய் பிடித்து இருக்கிறது என்று தவறாக நினைத்து, பத்திரகாளியின் முன்பாகக் காட்டேரிமுதலிய துர்தேவதைகளுக்குப் பூசைபோட்டால் அத்துர்தேவதைகள் நன்மையைத் தருமா? இந்த ஆட்டுக்கிடா உங்களுக்கு என்ன தீமையைச் செய்தது. இதனைவெட்டுவதால்அந்தப் பெண்ணின்காதல்வேதனைதீருமா? அவளதுவேதனைக்குக்காரணமாக உள்ள மன்மதன்தான் பயப்படுவானா? அவள் சாந்தி அடைவாளா? அவன் எட்டி அகன்று விடுவானா? ஆட்டைக் கொல்வதால் மன்மதன் ஒருபோதும் பயப்பட மாட்டான். ஆறுதல் அடைய மாட்டான். எட்டி அகன்று விட மாட்டான். உங்களுடைய பெண்ணின் காம நோயும் ஒரு போதும் தீராது. எனவே, அவள் விரும்புகிற காதலனுக்கு அவளை விரைவில் திருமணம் செய்து கொடுங்கள். அதுதான் அவள் காதல் நோய் தீர்க்கும் மருந்தாகும். அதை விடுத்து ஆட்டுக்கிடா வெட்டுவது எவ்விதத்திலும் பொருத்தம் இல்லை. மேற்கண்ட கருத்தை, சுடச்சுட (ஆடு கத்தும் பாணியில்) சாடிச் சித்தரித்துக் காட்டுகிறார், வடலூர் வள்ளலார் அவர்கள். அவர்களது இந்தப் பாட்டை இனிக் காண்போம்:-

இம்மை யறையனைய வேசூர<br>
மாதருமா<br>
இம்மையுமை யிம்மையையோ<br>
என்செய்த - தம்மைமதன்<br>
மா மா மா மா மா மா மா மா மா<br>
மா மா மா<br>
மா மா மா மா மா மா மா

இம்மையல் தையல் நையவே<br>
சூர் அ(ம்)மா தருமா?<br>
இம்மை உ(ம்)மை என் செய்தது<br>
- அம்மை மதன<br>
அஞ்சுமா? ஆறுமா? எட்டுமா?<br>
இம் மையல் - இந்த மயக்கங்<br>
கொண்ட<br>
தையல் - பெண்<br>
நைய(வே) - காதல் வேதனை<br>
யினால் வருந்த?(ஏகாரம்-<br>
அசை)

சூர் அ(ம்)மா - அச்சத்தைத் தருகின்ற காட்டேறி முதலிய பெண் தெய்வங்கள்.
(சூர் - அச்சம், அம்மா - பெண் தெய்வம்)
'ம்' - இடைக்குறை
தருமா - நன்மை தருமா?
இம் மை - இந்த ஆட்டுக்கிடா யானது,
உமை - உங்களை (உங்களுக்கு), (உருபு மயக்கம்)
இம்மை-இப்போது (இவ்வுலகில்)
என்செய்தது? - என்ன தீமை செய்தது?
(இந்த ஆட்டுக்கிடாயை நீங்கள் பலியிடுவதனால்)
அம்மை மதன் - அழகிய கரிய மன்மதன்
மா மா மா மா மா (அஞ்சுமா - பயப்படுவானோ?
மா மா மா மா மா மா (ஆறுமா) - ஆறுதல் (சாந்தி) அடைவானோ?
மா மா மா மா மா மா மா மா (எட்டுமா) -எட்டி அகன்றுவிடுவானோ?

(வினா "எதிர்மறை"-அஞ்சான் ஆறான், எட்டான்என்று பொருள் தந்தது)

மேற்கண்ட பாட்டில் அய்யா அவர்களது வேதனை கலந்த வெறுப்பு, மற்றும் மன ஊசலாட்டம் மிகத்துல்லியமாகச் சித்தரிக்கப் பட்டுள்ளது. மேலும் அவர் களுடைய புலமையும் தமிழ் எழுத்துக்களைக் கையாளும் தனித் தன்மையும், ஓர் ஆடு வீறு கொண்டு எழுந்துபேசுவது போல வும் அமைந்துள்ளது. கடைசியில் இரண்டு அடிகளில் மட்டும் 'மா' 'மா' என்ற எழுத்துக்கள் 19 உள்ளன.

அவைகளை 5, 6, 8, 'மா' க்க ளாக அமைத்து, அஞ்சுமா, ஆறுமா, எட்டுமா எனக்கொள்ள வேண்டும் என்பதைக்காட்டி இருப்பது ஒரு தனிச்சிறப்பு ஆகும்.

# திருவாசகமும் நாட்டுப்புற மரபுகளும்

கு. அழகேசன் மதுரை

51 பதிகங்களைக் கொண்டது திருவாசகம். மாணிக்கவாசகரின் பக்திப்பாசுரங்களை இறைவனே விரும்பிக்கேட்டதாகத்திருவாசகத் தின் பாடற்பொருள் சிறப்பிக்கப் படுகிறது. அவ்வாறு இயற்றப் பட்ட இவ் விலக்கியத்தில் சிவ புராணம், கீர்த்தித் திருஅகவல், திருவண்டப் பகுதி, திருச்சதகம், போற்றித் திருஅகவல், நீத்தல் விண்ணப்பம் முதலிய பகுதிகள் இறைவனின் பெருமையை வெளிப்படுத்தியும் - ஒப்புமைப் படுத்தியும் உரைக்கின்ற பதிகங் கள் ஆகும். எஞ்சிய திருவெம் பாவை,திருஅம்மானை,திருப்பொற் சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார்,திருத் தோணோக்கம், அன்னைப்பத்து குயிற்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி ஆகிய 14 பதிகங்களும் நாட்டுப்புற மரபு களைக் கூறும் பதிகங்கள்.

இறையருள் பெற்ற பெருங் கவிஞராக மணிவாசகர் விளங் கியதாலும் பாண்டியவேந்தனின் அரசாட்சியில் தலைமை அமைச்சர் பொறுப்பை நிர்வகித்ததாலும் நாட்டுப்புற பழக்க வழக்கங்களை இடையிடையே தம் பக்தி நூலுள் இணைக்க வேண்டிய சூழல்கள் ஏற்பட்டன.

அக்காலப் பழக்க வழக்கங்களை தாமியற்றும் பாக்களில் செருகு வது பண்டைக்காலப்புலவர்களது பழக்கமாகும். குடிமக்கள் காப் பியமெனப் போற்றப்படும் சிலப் பதிகாரத்தில் வள்ளைப்பாட்டு, குன்றக்குரவை, ஆய்ச்சியர்கூத்து, கடற்கரைப்பாடல், வேட்டு வரது பாடல், பசுமேய்க்கும் பெண்களின் பாடல் என்பன போன்ற நாட்டுப்புறக் கூறுகளை காப்பியக்கதையோடு இணையு மாறு செருகியுள்ளார் இளங்கோ அடிகள். இதற்கு முன்னமே 'பண்ணத்தி' என்றநாட்டுப்பாடல் வகையினைத் தமிழ்மொழியின் மூத்த வயதுள்ள இலக்கணமாம் தொல்காப்பியம் குறிப்பிட்டிருக் கிறது.

''இவ்வகைப் பாக்கள் இயல்பை நூற்பாவால் சுட்டிச்சென்றவர் தொல்காப்பியர். அவற்றிற்கு ஓர் இலக்கிய வடிவம் தந்தார் இளங்

கோவடிகள். இவர்களிலிருந்து வேறுபட்டு நாட்டுப்புற நம்பிக் கைகளை பக்தியிலக்கியத்திலும் சார்த்திக் கூறலாம் என்ற சிந் தனையைக் கால்கோள் செய்த முன்னவர் மணிவாசகப் பெருந் தகை எனக் கருதலாம்.

'உள்ளேன் பிறதெய்வம் உன்னை யல்லாது எங்கள் உத்தமனே' என்ற கொள்கை மணிவாசகரின் பக்தி நிலைக்கு ஏற்றதாக இருந் தாலும் கூட அவரது கருத்துக் கள் அகப்பொருள் மரபை யொட்டி வெளிப்படும்போதே மேலும் சிறக்கிறது.

முத்தணி கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டினம் ஆடஆ-
சித்தம் சிவனொடும் ஆடஆட,
செங்கயற்கண்பலி ஆடஆட,
பித்தம் பிரானொடும் ஆடஆட,
பிறவி பிறரொடும் ஆடஆட,
அத்தன் கருணையொடு ஆடஆட,
ஆடற் பொற்சுண்ணம் இடித்து
நாமே.

என்னுமாறு அமைந்த எண்ணி றந்த ஆட்டப் பாடல்வழியே இறையருளை வாதவூரர் வியந் திருக்கிறார்.

அம்மானை ஆட்டம் குறித்து 20 பாடல்கள் திருவாசகத்துள் காணப்படுகிறது. வீட்டிலிருந்து கொண்டேவிளையாடுகின்றஆட்ட வகையுள் இதுவும் ஒன்று. இந்த ஆட்டத்தை ஆடுவதற்கு, இரு வர் தேவை, ஐந்து கல் அல்லது ஏழுகல்லை மேலெறிந்து புறங்கை யால் அவற்றைத் தாங்கிக் கொண்டு ஆடவேண்டும். கைகள் ஆடும்போது வாயும் சத்தத் தோடு பாடவேண்டும். பாட்டு எதுவாகவும் அமையலாம். திரு வாசகத்துள்

''...... உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன்
பெருந்துறையில்
மேயானை வேதியனை மாதிருக்கும்
பாதியனை
நாயான நந்தம்மை ஆட்கொண்ட
நாயானைத்
தாயான தத்துவனைத் தானே
உலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்
காண் அம்மானாய்:

என்றவாறு அமைகிறது.

நாடகங்கள் திரைப்படங்கள் ஆகியவற்றின் நிலையை அம் மானைப் பாடல்கள் மணிவாசகர் காலத்தில் பெற்றிருந்தன. இத் தகைய அம்மானை ஆட்டத்தைக் குமரிமாவட்டத்தார் கழற்சி ஆட்டம், கல்லங்காய் ஆட்டம் அம்மானைப் பண்ணுங்கால், கட்டிப்பிடித்தல், ஆகியனவாறு வகைப்படுத்தி அழைக்கின்றனர். அம்மானைப் பாடலைத்தவிர நாடோடி இலக்கியத்தின் பிற கூறுகளையும் திருவாசகத்துள் இணைத்தவர் மாணிக்கவாசகர். திருப்பொற் சுண்ணம் என்பது ஒரு வகை மகளிர் விளையாட்டு. 'நலங்குமாவு' என்று சென்னை வட்டாரத்தில் இதனைக் குறிப்

டுவர். இருபது பாடல்களில் இவற்றைக் கவிஞர் குறிப்பிட்டு உள்ளார்.

நீராடும்போது உடம்பில் பூசுவதற்கேற்ற வண்ணக் கலவையால் ஆன மஞ்சனப் பொடியை இடித்தல் 'சுண்ணம் இடித்தல்' என நாட்டுப்புறங்களில் பெயரிடப் படுகிறது. நான்கைந்து வீட்டிலுள்ள பெண்கள் உற்சாகத்துடன் ஒன்று கூடுவர். தமக்கு வேண்டிய சுண்ணத்தைச் சேர்ந்தார்போல இடித்துக்கொள்ளும் அவ்வழக்கம் கிராமியச்சூழல் உள்ள இடங்களில் இன்றும் காண முடியும்.

கும்மாளமும் உற்சாகமும் ஒருங்குசேர்ந்து சோம்பல்தெரியா வண்ணம் அழகான பாட்டமைப்போடு பொற்சுண்ணம் இடிக்கும் நிகழ்வு உருவம் பெறுகிறது. பெண்களின் ஒளிவு மறைவில்லா உள்ளக்கிளர்வுகள் இப்பாடல்களில் பிரதிபலிக்கும்.

இப்படியாக எண்ணற்ற காட்சிகளை நேரில் கண்ணுற்றவர் மாணிக்கவாசகர் கனிந்த உள்ளத்தோடு கன்னியர்கள் இதயகீதம் எழுப்பும் இவ்வகை அகப்பாடல்களை இறைவனைத் துதித்துப்பாடிவணங்கும் நிகழ்ச்சியோடு வாதவூரடிகள் தொடர்பு படுத்தியுள்ளார். அன்பின் தூண்டுதலால் எழும் ஆன்ம உணர்வுகளை நாட்டுப்புற பாமரர்கள் பயன்படுத்தும் விளையாட்டுக்கேற்ற பாடல்களில் குழையுமாறு தமது பக்திப்பாசுரங்களை அமைத்த போக்கு, நினைந்து மகிழ்தற்குரியது.

பொழுதுபுலரும் முன்னே பெண்கள் நீராடச்செல்வது கிராமிய மகளிரின் பழைய வழக்கம். திருவெம்பாவையில் 20 பதிகங்களால் நீராடலைப் புகழும்போது பெண்களுக்குள் நடக்கும் கேலிப் பேச்சினையும் கிண்டல் வார்த்தைகளையும் பட்டவர்த்தனமாகக் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

ஒண்ணித் தில நகையாய்;
காலத்தைப் போக்காதே.
கோழியும் குருகும் கூவுகின்றன.
வெண்சங்கு ஏழிசையால்
ஒலிக்கின்றன. இதையெல்லாம் அறி
யாமல் தூங்குகின்றாயோ;
வன்செவியோ நின் செவி
வாழ்த்தொலிபோய் வீதிவாய்க்
கேட்டலுமே விம்மி விம்மி மெய்
மறந்து
போதார் அமளியின் மேல் நின்றும்
புரண்டு இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்

என்றவாறு பெண்கள் மார்கழி மாத நீராடலுக்குச் செல்லும் இயல்பை வகுத்துள்ளார்.

இறைவனைப் புகழ்தலே கவிஞருக்கு முழுநோக்கம் ஆயினும் இடையிடையே இதுபோன்ற நாட்டுப்புற உணர்வுகளுக்கு ஒரு வடிவம் தந்த முறையினைத் திரு

வாசகத்துள் பரக்கக் காணலாம். இது மணிவாசகருக்குக் கிடைத்த ஒரு செல்வாக்கு.

திருப்பூவல்லி என்ற பதிகம் திருவாசகத்துள் காணப்படுகிறது அல்லி மலரினைக் கொய்தாடும் வழக்கம் நாட்டுப்புறங்களில் ஒரு மரபாக இன்றும் விளங்கும். மாலைக்காலத்தில் அல்லிமலரினைக் கொய்து நீக்கி தலையில் சூடி ஆடும் இம்மகளிர் விளையாடல் திருப்பூவல்லி எனப்படும். ஆன் மாவை மாயா காரியங்களின் பிணிப்பினின்றும் நீக்கி இறையருளில் ஐக்கியப்படுவதைக் கருவாகக் கொண்டு திருவாசகத்தின் திருப்பூவல்லியாட்டம் உள்ளுறையாகக் காட்டப்படுகிறது.

'கொன்றைப்பொன் தாதுபாடி நாம்
பூவல்லி கொய்யாமோ'
'உருமுன்றும் ஆகி உணர்வரிதாம்
ஒருவனுமே'
புரமுன்றும் எரித்தவா பூவல்லி
கொய்யாமோ'

என்பனவாக மகளிர் ஒருவரையொருவர் நோக்கிப்பாடிச் செல்வர். நோக்கிப் பாடும் பழக்கம், பலநிலைகளில் வளர்ச்சி பெற்றிருக்கிறது. எதிர்காலத்தை நோக்கிக் கவலைப்படும் பெண்கள் தன் கண்களை இறுக மூடிக்கொண்டு தரையில் வட்டமிடுவர். வேறெங்கும் நோக்காமல் ஆடும் இந்த ஆட்டம் 'கூடல் இழைத்தல்' எனச் சொல்லப்படும். தோளை மட்டும் நோக்கி ஆடும்ஆட்டம் 'தோள் நோக்கம்' எனப் பெயர் பெறும். திருத்தோணோக்கம் என்றவாறு வாதவூரடிகள் இவ்விளையாட்டைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவர் தோளினை மற்றொருவர் பற்றிக் கொண்டு ஆடும் வழக்கம் சிலப்பதிகாரத்துள் இளங்கோவடிகளால் காட்டப்பட்டுள்ளது. எழுவர் வட்டவடிவமாக நின்று கை கோத்து ஆடும் கூத்தினை அடிகள் சொல்லியிருக்கிறார். அதற்குப் பெயர் 'குரவைக்கூத்து'. குரவைக் கூத்திலிருந்து வேறுபட்டது தோள்நோக்கம் என்னும் கூத்தாகும்.

''பொய்மைகண்டு மயங்காத படி என்னைத் தெளிவித்த நின்னடிகளைச் சேர்தற் பொருட்டுத் தோணோக்கம் ஆடுவோம்''.

'பரமம் யாம்பரமம் என்றவர்கள்
பதைப்பொடுங்க
அரனர் அழலுருவாய் அங்கே
அளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம்
ஆடாமோ'

என்பன திருவாசகத்தில் காணப்படும் திருத்தோணோக்கப்பாடலின் உட்கருத்து.

(வளரும்)

உ

சிவ சிவ

## மதுரையில்

# திருவிளையாடற் புராண பிரசங்க நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

ரௌத்திரி௵ பங்குனி௴ 23-ம் தேதி முதல்
துன்மதி௵ சித்திரை௴ 16-ம் தேதி முடிய
(5—4—81 முதல் 28—4—81 முடிய)

இடம் :—

**தருமை ஆதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடம்**
397, வடக்கு மாசிவீதி, மதுரை.

மகாவித்துவான் திரு. க. வெள்ளைவாரணம் அவர்கள்
5—4—81 முதல் 12—4—81 வரை
திருவிளையாடற் புராணம் — மதுரைக் காண்டம் பற்றியும்,

கயப்பாக்கம் திரு. சு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்
13—4—81 முதல் 20—4—81 வரை
திருவிளையாடற் புராணம் — கூடல் காண்டம் பற்றியும்,

நெல்லை சிவமணி புலவர் ம. சிவசம்பு பி. லிட்., அவர்கள்
21—4—81 முதல் 28—4—81 வரை
திருவிளையாடற் புராணம்
— திருவாலவாய்க் காண்டம் பற்றியும்,

நாடோறும் மாலை 7-மணி முதல் 9-மணி வரை
விரிவுரை நிகழ்த்துவர்.

ஆணைப்படி,

திருப்பனந்தாள்,
2—4—81.

முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர், ஸ்ரீ காசிமடம்.

# போற்றிப் பஃறொடை

தெளிவுரை:

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்

'வன்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர் பொருள் தாரம் என்றிவற்றை, நம்பினர் இறந்தால் நமன்தமர் பற்றி எற்றிவைத்து எரிஎழுகின்ற, செம்பினல் இயன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கு அஞ்சி, நம்பனே வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசா ரணியத்துள் எந்தாய்.'- (பெரிய திரு: 1-6-4.) எனச் சான்றோர்கள் கூறுமாற்றான் இவ்வுண்மை அறியலாம். ஆழ்நரகம் - மிக ஆழமான நரகம். அந் நரகம் 'இருள் சூழ்ந்தும் தன்பால் வந்தாரை எளிதில் விடாதும் இருப்பதாகும். 'இருள்சேர்ந்த இன்னா உலகம்' 'அண்ணாத்தல் செய்யாது அளறு' எனத் திருவள்ளுவர் கூறுமாற்றான் இவ்வுண்மை அறியலாம். தாம் தாம் செய்யும் வினைக்கேற்ப இத்தகைய கொடுந்துன்பங்களைத் துய்த்தல்உறுதியாதலின் அறிஞர் பெருமக்கள் இதனை நினைவு படுத்தி அறம் கூறுவாராயினர். 'கணிச்சிக் கூர்ம் படைக் கடுந்திறல் ஒருவன் பிணிக்குங்காலை இரங்குவிர் மாதோ' எனச் சங்கச் சான்றோரும் கூறுவது காண்க. கடன்-முறைமை ஒருவருக்கு நோயுறின் அதன் இயல்பையும் அது தோன்றற்குக் காரணமாயதை யும், பின் அது நீங்கு மாற்றையும் எண்ணுதல் முறைமையாம். 'நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்' என்பது திருக்குறள். நோய் நீக்கத்திற்காகச் சுடுதலும் அறுத்தலும் ஆகிய மருத்துவமுறை அக்காலத்திருந்தன. கண் ஒளி கெடுங்கால் அவ் வொளியை மறைக்கும் திரையை நீக்கிக் காண்டற் குரியதாக்கலும் அக்காலத்து இருந்ததொன்றேயாம். இக்கால ஆங்கில மருத்துவத்திலும் சுடுதல் நீங்கலாக ஏனைய இரண்டும் இருத் தல் அறியத் தக்கது. நோயுற்றோர்க்கு இம்மருத்துவமுறைகள் துன்பம் தருமேனும் அதன்பின் நோய்நீங்கப் பெறுதலின் இவ் வாறு செய்தல் இயல்பேயாம். இவ்வருஞ் செயல்கட்குப் பொருள் கொடுத்துப் பாராட்டுதலும் இயல்பேயாம். மனுவரசன், ஒருமைந்தன் தன் குலத்துக்கு உள்ளான் என்பதையும் உணராது அவன்தன் மரு மத்தில் தேரோட்டி அவன் உயிரை மாய்த்தமையும் அவன் செய்த

கொடும் பாவம் நீங்கவேயாம். எனவே மருத்துவர்களும் இம் மனு வேந்தனும் செய்த செயல்கள் பார்த்ததற்குக் கொடுமை போலத் தோன்றினும் உண்மையில் நோய் நீக்கமும் வினை நீக்கமும் பெறச் செய்தனவேயாம். இவ்வாற்றான் இயமன் வழி உயிர்கள் செய்த வினைக்குத்தகச் செக்கிலிட்டு அறைத்தல் முதலாய கொடுஞ் செயல்களை இறைவன் உய்த்தலும் உயிர்களின் வினை மாசு நீங்கச்செய் தனவே யாதலின் அறமேயாம் என்பது கருத்து. இதனை மறக் கருணை என்பர். 'அறத்திற்கே அன்புசார் என்ப அறியார் மறத்திற்கும் அஃதே துணை' என்பதும் காண்க. இறைவனின் அருட் செயல்களுக்கு மருத்துவரையும் அரசனையும் உவமை காட்டுதல் 'மண்ணுளே சிலவி யாதி மருத்துவன் அருத்தி யோடும், திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாம், கண்ணிய கட்டிப்பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன், அண்ணலும் இன்பத்துன்பம் அருத்தியே வினைய றுப்பன்'' (சிவஞான சித்தியார். சூத்திரம் 2 பாடல் 35) 'ஆணையால் அவனி மன்னன் அருமறை முறைசெய் யாரை, ஆணை யில் தண்டஞ் செய்தும் அருஞ்சிறை யிட்டும் வைப்பன், ஆணையின் வழிசெல் வோருக் கருப்பதி செல்வம் நல்கி, ஆணையும் வைப்பன் எங்கும் ஆணையே ஆணையே காண்' (சித்தியார் 2-31) எனவரும் அருணந்தி சிவத்தின் வாக்காலும் அறியலாம். வாய்த்த நெறி ஓடிய தேர் - தேர் தான் இயங்குதற்கான வழியில் ஓடிய தேர். எனவே கன்று தன் நெறி மாறியதன்றி தேர் தன் நெறிமாறியதன்று என்ற நயம் காண்டற் குரியது. 'அரசுலாம் தெருவில் போங்கால்' எனச் சேக்கிழார் கூறுமாறுங்காண்க. வாய்த்த நெறி - இன்ன பொழுது இத்தேர் உருளையால் இக்கன்று இறக்க வேண்டும் எனஅமைக்கப்பட்ட நெறி எனினும் அமையும். எனவே தேர், கன்றின் வினைவழி ஊர்ந்த தன்றிவேறன்று என்பது புலனும். இத்தகைய நயந்தோன்ற அமைத் திருக்குந்திறன் பாராட்டுதற்குரியது.

53 பல்லுயிர்க்கும்

இன்ன வகையால் இருவினைக்கண் நின்றருத்தி
முன்னைய முதல்என்ன முதலில்லோன் — நல்வினைக்கண்
எல்லா உலகும் எடுப்புண்டு எடுப்புண்டு
செல்காலம் பின் நரகம் சேராமே — நல்லநெறி
எய்துவதோர் காலம்தன் அன்பரைக் கண்டு இன்புறுதல்
உய்யும் நெறி சிறிதே உண்டாக்கிப் — பையவே

மட்டாய் மலராய் வருநாளில் முன்னைநாள்
மொட்டாய் உருவாம் முறைபோலக் — கிட்டியதோர்
நல்ல பிறப்பில் பிறப்பித்து நாடும்வினை
எல்லை யிரண்டும் இடையொப்பில் — பல் பிறவி
அத்தமதில் அன்றே அளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்கும் தரம்போற்றி.

(தெ-ரை) இதுகாறும் கூறப்பட்ட முறையினால் காத்தருளிய உயிர்கட்குக் கட்டுநிலை முடியுமளவும் இருவினைப் பயன்களை முன்னின்று துய்ப்பிக்கச் செய்து தனக்கு முன்பும் ஒரு முதல் உண்டு என எண்ணுதற்கு இல்லாத ஒப்பற்ற முதல்வனாகிய சிவபெருமான் தனது செவ்விய ஐந்தொழில்களால் எல்லா உலகிலும் மாறி மாறி உடலொடு கூடி நுகருமாற்றான் துய்க்குமாறு செய்யும் காலத்தில், பின் நரகம் சேராதவாறு உய்யும்படி எய்தும் காலத்துத் தனது மெய்யடியார்களைக் கண்டவிடத்துத் தன்னைக் கண்டது போல அவ்வுயிர்கள் இன்புற்று அவர் ஏவின பணிகளை உவகையோடு ஏற்றுச் செய்யுமாறு சிறிதளவு நல்அறிவை உண்டாக்கி, அந்நல்வழியின் வழியே மெதுவாகத் தேன் நிறைந்த மலராய் மலரும் நாளைக்கு முன்னாளில் அரும்பாய் வடிவு கொண்டு இலங்குவதைப் போலத் திருவருளை அணுகுவதோர் நல்ல பிறவியில் பிறக்குமாறு செய்து, 'நாட்டப்பட்ட இருவினைகளிலும் உவர்ப்புத் தோன்றி இருவினை ஒப்பு நேர்ந்தவிடத்து அன்றே பல் பிறவிகளும் முடிதற்குரிய காலம்' எனத் திருவுளம் கொண்டு அக்கால வரவினைப் பார்த்து அவ்வமையத்துத் தன் அருட் பதிவைச் செய்யும் அருள் திறத்திற்கு வணக்கம்.

இன்ன வகையால் — இது காறும் கூறப்பட்ட ஒன்பது வகையான்; எவ்வுயிர்க்கும் முதல்வனாய் இருக்கும் இறைவனுக்கு அவனுக்கொரு முதல்வன் இல்லை 'மேல் ஒருவன் இல்லாதான் எங்கள் இறை' என்னும் திருவருட் பயனும். நல்வினைக்கண் — உயிர்களை ஈடேற்றக் கொள்ளும் ஐந்தொழிற்கண். அவ்வைந் தொழில்களாவன படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனபனவாம். இறைவனை அடைதற்கு அவனது மெய்யடியார் வாயிலாய் இருத்தலின் 'அன்பரைக் கண்டு இன்புறுதல் உய்யும் நெறி' என்றார். மலராதற்கு முன்னைய நிலை மொட்டாய் இருப்பதாகும். அதைப் போன்றே இறைவனை அடைவதற்கு முதல் நிலை நற்பிறப்பிற் பிறப்பதாகும். நற்பிறவி என்பது ஈண்டுத் திருவருளை உணர்தற்கும் அணுகுதற்கும் ஏற்ற பிறவியாகும். நரர் பயில்தேயந் தன்னில் நான்மறை பயிலா நாட்டில்,

விரவுதல்ஒழிந்துதோன்றல் மிக்க புண்ணியந்தா னுகும்,தரையினிற் கிழைவிட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து,.பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணெ ணுதே' எனவரும் சித்தியார்ப் பாடல் ஈண்டு எண்ணற் குரியதாகும். இருவினை ஒப்பாவது இன்பத்துள் இன்பம் விழையாமலும் துன்பத்துள்துன்பம் உருமலும் இருத்தலாம்திருவருள் ஒன்றையே பற்றி நிற்குங்கால் இந்நிலை கைவரப் பெறும். நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே' எனவரும் அருளுரையும் காண்க. இந்நிலை எய்தப் பெறின் பிறவி அறும். அந்தம் - இறுதி: அந்தம் அத்தம் என்று ஆயிற்று. சத்திபதிதல் - இறைவனுடைய திருவருள் உயிரிடத்துப் பதிதல்; திருவருள் கூடுதல். இதனைச் சத்திநிபாதம் என்பர்.

59. முத்திதரு

நன்னெறியின் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்
அந்நிலையே உள்நின்று அறுத்தருளிப் — பின் அன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப் — பூவலயம்
தன்னின்று நீங்காச் சகலர்க்கு அவர்போல
முன்னின்று மும்மலம் தீர்த்து ஆட்கொள்கை — அன்னவனுக்கு
ஆதி குண மாதலினுல் ஆடுந் திருத்தொழிலும்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் — பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியும் மதிக்கொழுந்தும் — அச்சம் அற
ஆடும் அரவும் அழகார் திருநுதல்மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும் — கேடில்லயம்
கூட்டும் தமருகமும் கோல எரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும் — வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தாளி னும்அடியார்
உள்ளத்தி னும்பிரியா ஒண்சிலம்பும் — கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக்கழலும்
ஒன்றும் உருத் தோன்ருமல் உள்ளடக்கி — என்றும்
இறவாது இன்பத்து எமை இருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து — நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதன்என்று
பேரிலா நாதன்ஒரு பேர்புனைந்து — பாரோர்தம்
உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம் போற்றி

(தெ—ரை) உயிர்கட்கு வீடுபேறு வழங்கும் நிலையில் ஒரு மலமுடைய விஞ்ஞானகலர்க்கு அவர் உள்ளத்தின்கண் ஒளிவடிவாய் நின்று அவ் வாணவ மலத்தை அறுத்து வீடுபேறு வழங்கி அருளியும், அன்பு மீதூர்ந்து நிற்கும் பிரளயாகலர்ச்கு மானும் மழுவும் நாற்றேளும் முக்கண்ணும் கொண்டு விளங்கும் தெய்வத் திருவுருவில் நின்று அவர்கள் மாட்டு இருக்கும் ஆணவம் கன்மமாகிய இரு மலங்களையும் நீக்கி வீடுபேறு வழங்கி அருளியும், இந் நிலவுலகை விட்டு நீங்காதிருக் கும் சகலர்க்கு அவர்களைப்போல் மானுட வடிவு கொண்டு முன்னின்று அவர்கள் மாட்டு இருக்கும் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங் களையும் நீக்கி வீடுபேறு வழங்கி அருளியும், ஆட்கொள்ளுதல் அம் முதல்வனுக்கு எஞ்ஞா றும் நீங்காத அருட்குணம் ஆதலால் திருச் சிற்றம்பலத்தில் நின்று ஆடும் திருக்கூத்தும், ஒளிபொருந்திய நீல மணி போன்று இலங்கும் கழுத்தழகும், தனது வடிவில் ஒரு கூற்றைக் கொண்டு நிற்கும் பச்சைநிறம் பொருந்திய சிவகாமி அன்னையைக் கொண்டு இலங்கும் இடப்பாகமும், பவள நிறம்போல் விளங்கும் அழகிய திருச்சடைமேல் வைத்தருளும் கங்கையும், குழவித்திங்களும் அச்சமின்றி ஆடும் பாம்பும், அழகு பொருந்திய திருத்தகவு அமைந்த நெற்றியின் மீது நீண்ட வடிவு கொண்டு இலங்கும் நெருப்புக் கண் ணும், தப்பாத இசை கூட்டும் உடுக்கையும், அழகு பொருந்திய நெருப்பகலும், இடுப்பிடத்து இணைத்துக் கட்டப்பட்டிருக்கும் பாம்பா கிய கச்சும், புலித்தோல் உடையும், வீடு பேற்றில் திளைக்குமாறு செய்தருளும் திருவடியிலும் அடியவரது உளத்திலும் பிரியாது விளங் கும் திருச்சிலம்பும், மறைவாக உயிரைத் தன்வயப் படுத்தி ஈர்க்கும் இருவினைகளையும் வென்று அவ்வுயிர்களின் பிறப்பறுத்தற்காகக் கட்டி இருக்கும் வீரக்கழலும் ஆகிய அடையாளங்கள் அனைத்தையும் வெளிக் காட்டாது உள்ளே அடக்கி என்றும் நீங்காத பேரின்பப் பெருவாழ்வில் எம்மை இருத்துதற்காக இதுகாறும் பிறவாத முதல் வன் இன்று பிறந்து வந்தான் எனும்படி தேனிறைந்த மாலையை அணிந்திருக்கும் மார்பினை உடைய மறைஞானசம்பந்தன் என்று இதுகாறும் ஒரு பெயரில்லாதவன் ஒரு திருப்பெயரையும் ஏற்று உல கினரின் உணவு, உறக்கம், அச்சம், நுகர்வு ஆகியவற்றேடு தாமும் ஒத்து ஒழுகி எமை ஆட்கொண்டு மகிழ்ந்த அரும் பண்பிற்கு வணக்கம்.

ஒரு மலமுடையாரை விஞ்ஞானகலர் என்றும், இரு மலம் உடையாரைப் பிரளயாகலர் என்றும், மும்மலம் உடையாரைச் சகலர் என்றும் கூறுவர். ஒரு மலமுடையார்க்கு இறைவன் உள் நின்று

அருளுவன். இருமலம் உடையார்க்கு தன் தெய்வத் திருவுரு கொண்டு முன்னின்று அருளுவன். மும்மலம் உடையார்க்கு அவர் சரீரப் போல வடிவுகொண்டு குருவாக வந்தருளுவான், இறைவனே குருவாக வரும் முறைமை பற்றி ஆசிரியர் இறை வடிவைப் பலவாறு விரித்துக் காட்டி அவ் விறைவனே மறைஞான சம்பந்தன் என்னும் பெயர் கொண்டு தமக்குக் குருவாக எழுந்தருளினன் என்று அருளு கின்றார். மணிமிடற்றுச் சுந்தரம்-அழகிய கழுத்தழகு. தாம் நஞ் சுண்டு உயிர்களைக் காத்தமை ஈண்டு அழகெனப் போற்றப் பெற்றது. பச்சை; ஈண்டு அந்நிறமுடைய அன்னையைக் குறித்தது. வைத்த என்பது எதுகை நோக்கித் திரிந்தது. இலயம்-தாளம்பட இசைக்கும் இசை. இறைவனது திருவடியே பிறவி அறுக்கும் பெற்றியது. ஆதலின் 'விட்டின்ப வெள்ளத்து அழுத்திவிடும் தாள்' என்றார், 'முத்தி நான்ற மலர்ப் பதத்தே நாடு' என வரும் திருவாக்கும் காண்க. ஞானியர்தம் உள்ளத்து இறைவனது திருச்சிலம்பு ஓசை ஒலிக்கும், ஆதலின் இறைவனது தாளிலும் அடியாரது உள்ளத்தி லும் நீங்காத திருச்சிலம்பு என்றார். 'திருச்சிலம்பு ஓசை ஒலி வழியே சென்று நிருத்தனைக் கும்பிடு என்று உந்திபற' என வரும் திருவாக்கும் காண்க. இருவினைகளும் உயிரைத் தன்வழி ஈர்ப்பதில் ஒரு தன்மைத் தாம். தத்தம் திங்கு தோன்றுதவாறு ஈர்த்தலின் 'கள்ளவினை' என்றார். 'கள்ளவினைப் பசும் போதக் கவள மிட' என்பர் பரஞ்சோதி யாரும்.

71. மிண்டாய

ஆறு சமயப் பொருளும் அறிவித்து அவற்றில்
பேறு இன்மை எங்களுக்கே பேருக்கித் - தேருத
சித்தம் தெளியத் திருமேனி கொண்டுவரும்
அத்தகைமை தானே அமையாமல் - வித்தகமாம்
சைவ நெறியிற் சமய முதலாக
எய்தும் அபிடேகம் எய்துவித்துச் - செய்யதிருக்
கண்ணருளால் நோக்கிச் சடியபிறப் பாற்பட்ட
புண்ணும் இருவினையும் பே ய் அகல - வண்ணமலர்க்
கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த் தகைமை யெல்லாம் விரித்தோதி - ஒத்தொழுகும்
சேண்ஆர் இருள்வடிவும் செங்கதிரோன் பால்நிற்பக்
காணு தொழியும் கணக்கேபோல் - ஆணவத்தின்
ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலைபோற்றி

(தெ - ரை) : தருக்குச் செறிந்த புறச்சமயம் ஆறின் பொருளேயும் அறிவித்து அவற்ருல் பயன் இன்று என அறியும் பேற்றை உளவாக்கித் தெளிதலில்லாத சித்தம் தெளியுமாறு திருமேனி கொண்டு எழுந்தருளியதோடு அமையாமல் மேதகவு அமைந்த சைவப் பெரு நெறியில் தலைப்படுமாறு சமயம் முதலாக அபிடேகம் ஈருக உள்ள தீக்கை வகைகளேயும் செய்தருளிச் செவ்விய திருக்கண் நோக்கருளி கொடிய பிறப்பினுல் பட்ட துன்பமும் இருவினேயும் நீங்குமாறு அழகு பொருந்திய தாமரை மலரனைய திருக்கைகளேத் தலைமீது வைத்தருளிக் குழைதலின்றிக் கல் போன்றிருக்கும் நெஞ்சை உருகுமாறு செய்து இறை உயிர் தளை ஆகிய முப்பொருள்களின் இயல்பையும் அறிவுறுத்தி முழுமையாக விண்ணை மறைத்து நிற்கும் இருள் வடிவும் அவ்விண்ணில் கதிரவன் தோன்ற அதன் கண் அடங்கி காணப்படாது நிற்றல் போல என்னைப் பற்றி நிற்கும் ஆணவத்தின் நிலைபேறு அழியாமலும் என்னைப் பற்ருமலும் நிற்கச் செய்யும் நெறிமுறைக்கு வணக்கம்.

புறச் சமயங்கள் ஆறும் வீடு பேற்றிற்கு ஆளாக்காது வெறும் மிடுக்கு ஒன்றுமே பற்றி நிற்றலின் 'மிண்டாய ஆறு சமயம்' என்ருர். அவ் அறுவகைச் சமயங்களாவன தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மாவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்பன. பொருள், கல்வி, மனைவாழ்வு முதலியவற்றைப் பற்றி நிற்கும் சித்தம் அவ்வவற்றிலும் பற்றியும் விடுத்தும் நிற்றலின் 'தேருத சித்தம்' என்ருர். 'வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி யெனும், பித்த உலகில் பிறப்போடு இறப்பெனும், சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த, வித்தகத் தேவர்க்கே சென்றூதாய்க் கோத்தும்பீ' எனவரும் திருவாக்கும் காண்க. 'சைவத்தின் மேல் சமயம் வேறில்லை அதில் சார்சிவமாம் தெய்வத்தின் மேல் வேறு தெய்வமில்லை' ஆதலின் அதன் மேம்பாடு விளங்க 'வித்தகமாம் சைவ நெறி' என்ருர். தீக்கை என்பது அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தைத் தருவது என்று பொருள்படும்: அதுசமயதீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை, அபிடக தீக்கை, நயன தீக்கை, பரிச தீக்கை, மானச தீக்கை, வாசக தீக்கை, சாத்திர தீக்கை, யோக தீக்கை எனப் பலவகைப் படும். சமய தீக்கையாவது ஒருவன் தன்னைச் சைவ சமயத்தவன் எனச் சொல்லிக்கொள்வதற்கு உரிமைப் படுத்துவதாகும். திருவைந்தெழுத்தைக் குருவின் வழி அருளப்பெற்று நாள்தொறும் ஓதி வருதலும், திருக்கோவில் வழிபாடு செய்தலும் இதன் பயனுக விளையத்தக்கதாம். விசேட தீக்கையாவது முற்கூறிய சமய தீக்கையைப்பெற்று அதன் வழிப் பயிற்சிபெற்ற ஒருவனுக்குச் சிவ வழி

பாடாற்ற உரிமை அளிப்பதாம். குருவின் வழி இச்சிவ வழிபாட்டைப் பெற்று இறைவனின் திருமகன் எனத்தகும் மேம்பாட்டைப் பெறுவது இதன் பயன்ஆகும். நிருவாண தீக்கையாவது முற்கூறிய சமய விசேட தீக்கைகளைப் பெற்று அவற்றின் வழி ஒழுகுவார்க்கு ஞானநெறியில் செல்லுதற்கு உரிமை அளிப்பதாம். ஞான நூல்களை ஓதவும் ஓதுவிக்க வும் இதன் வழி உரிமை கிட்டும். எழுத்து, சொல், சொற்றொடர், நிலம், பொருள், செயல் என அறுவகையானும் உயிர்செய்யும் வினைப்பயனை ஆசிரியன் தூய்மை செய்தற்குரியது இத்தீக்கை யாகும். நயன தீக்கையாவது மீன் தன் கண் நோக்கினால் தன் முட்டைகளி லிருந்து குஞ்சுகளை வெளிப் படுப்பதுபோல ஆசிரியன் தன் திருக்கண் நோக்கினால் மாணாக்கனுக்குப் பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதாகும். நயனம் - கண். பரிச தீக்கையாவது கோழி தன் அரவணைப்பால் தன் முட்டைகளிலிருந்து குஞ்சுகளை வெளிப்படுப்பது போல ஆசிரியன் தன் வலதுகையை மாணாக்கனின்தலைமீது வைத்து அருளுவதன் வாயிலாகப் பாசத்தைக் கெடுத்து ஞானத்தை கொடுப்ப தாகும். பரிசம் - தீண்டுதல். மாவச தீக்கையாவது ஆமை தனது நினைவினால் தன் முட்டைகளிலிருந்து குஞ்சுகளை வெளிப்படுப்பது போல ஆசிரியன் தன் மனநினைவால் மாணாக்கனுக்குப் பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதாகும். மானசம்-நெஞ்சம். வாசக தீக்கையாவது ஆசிரியன் திருவைந்தெழுத்து முதலாய மந்திரங்களை மாணாக்கனுக்கு அருளுவதன் வாயிலாகப் பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதாம். சாத்திர தீக்கையாவது ஆசிரியன் தன் மாணாக்கனுக்கு மெய் நூல்களின் வழி இறை உயிர் தளை ஆகிய மூன்றன் இயல்புகளையும் உணர்த்தி அதன்வழி இறையருள் பெறு தற்கு ஆளாக்குவதாம் யோக தீக்கையாவது ஆசிரியன் தன் மாணாக்கனுக்கு யோக நெறிகளை உணர்த்தித் தன் யோக சாதனை யால் மாணாக்கனின் உடலில் புகுந்து பாசத்தைக் கெடுத்து ஞானத்தை வழங்குவதாம். அபிடேக தீக்கையாவது ஆசிரியன் தனக்குப் பின் ஆசிரியனாகத் தலைமை ஏற்போனுக்கு மந்திர நீரால் திருமுழுக்காட்டி ஞானம் வழங்கும் உரிமையைக் கொடுப்பதாகும்.

உயிருக்குப் பிறந்தும் இறந்தும் வரும் துன்பம் பெரிதாதலின் அதனைக் 'கடிய பிறப்பாற்பட்ட புண்' என்றார். மெய்த்தகைமை- உண்மை நிலை. எல்லாம் என்பதால் முப்பொருளையும் அடக்கிக் கூறுதல் கருத்தாயிற்று, கதிரவன் முன் இருள் அடங்கி நிற்றல் போல அருள் ஒளியின் முன் ஆணவம் அடங்கி நிற்கும். வீடு பேற்றிலும் ஆணவம் தன் தன்மை கெட்டு நிற்பதன்றி அழிவதில்லை. ஆதலின் 'ஆணவத்தின் ஆதி குறையாத' என்றார். ஆதி - நிலைபெறு.

# திருவிளையாடற் புராணம்

## உரை நடை

முதிய கடிய புலியேற்றினை ஒத்த வளர்ந்த உடலையுடைய இறைவனாகிய ஆசிரியனும், வீரக் கழலையணிந்து கச்சினையுங்கட்டித் திருவெண்ணீறு தரித்து வாளையும் கேடகத்தையும் கையில் தாங்கிக் கொண்டு அக் கிழ்மகனாகிய சித்தனுக்கு எதிரே வந்தனன்.

### இறைவனாகிய வாளாசிரியனும் சித்தனும் போர்புரிதல்

ஆண் சிங்கம் ஒன்றும் நரி ஒன்றும் எதிர்த்துப் போர் புரிந்தாற் போல வெள்ளிய பிறையும், மூன்று கண்களும், நான்கு திருத் தோள்களும், நஞ்சக்கறை விளங்கும் திருமிடறமாகிய இவற்றைத் தோன்றாது மறைத்து வந்த முதிய வாளாசிரியனாகிய இறைவனும், சித்தனும் எதிர்த்துப் போரினைச் செய்யத் தொடங்கினர். இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பர்; பின் செல்லுவர்; மீளவும் எதிர்சென்று மேலெழுந்து இடிபோல முழங்குவர்; கேடகத்துள்ளே பதுங்கி மறைவர்; பின்பு வெளித் தோன்றுவர்; ஏந்திய வாளை அசைப்பர்; இடசாரி வலசாரியாகச் சென்று வாளை வீசி வெட்டுவர்; அவ்வெட்டினை விலக்கித் திரும்புவர்; வெகுள்வர்; நகைப்பர்; வீர வாதம் பேசுவர்; சாரிகைமாறி எதிர்ப்பர்; புறங்காட்டிச் செல்வார் போலப் போவர்; சுழன்று போருக்கு அழைத்துத் திரும்புவர்; வாள்வெட்டினைத் தம் மார்பில் ஏற்பர்; தாம் கொண்ட குறியின் நெறிதவற நிற்பர். இவ்வாறு இருபது நாழிகை வரையும் நின்று இருவரும் போர்புரிந்தனர்.

### இறைவன் சித்தனுடைய அங்கங்களை வெட்டுதல்

அப்பொழுது வாளாசிரியனாகிய சிவபெருமான், போரினைக்காண் போர் அனைவரும் கேட்குமாறு, "உன்குரு பத்தினியை விரும்பிய உள்ளத்தையும், அவளை நோக்கித் தகாத மொழிகளைப்பேசிய நாவினையும், தொட்ட கையையும், விரும்பி நோக்கிய கண்களையும் காத்துக் கொள்வாய்; காத்துக்கொள்வாய்" என்று சொல்லிச் சொல்லி அவ்வங்கங்களையெல்லாம் வெட்டி வெட்டி எறிந்து இறுதியிலே தலையினையும் வெட்டிக் கீழே வீழ்த்திவிட்டு மறைந்தருளினர்.[1]

---

1. இங்கு, "ஒரு தனி அடியாற்கு உதவுதல் வேண்டி, மண்ணவர் காண வட்டணை வாளெடுத்(து) ஆதி சாரணை அடர்நிலைப்

''குரத்தியை நினைத்த நெஞ்சைக்
குறித்துரை நாவைத் தொட்ட
கரத்தினைப் பார்த்த கண்ணைக்
காத்தனை கோடி ''என்றென்(று)
உரைத்துரைத்(து) அவற்றுக் கெல்லாம்
உறுமுறை தண்டஞ் செய்து
சிரத்தினைத் தடிந்து விட்டித்
திருவுரு மறைந்து நின்றான்.

**சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை யாவரும் அறிதல்**

அப்போர்க்களத்தில் பார்த்துக் கொண்டு நின்றவர்களுள்ளே வாள்வித்தை பயிலும் மாணவர்கள் தமது முதிய ஆசிரியனைக் காணாது வீட்டிற்குச் சென்று தேடி, ஆசிரியரின் கற்பிற் சிறந்த மனைவியை நோக்கி, ''ஆசிரியர் எங்குச் சென்றுள்ளார்?'' என்று வினவினர். அவள். ''திருக்கோவிலுக்குச் சென்றனர்'' என்று கூறினாள். என்ற அப்பொழுதே கோயிலுக்குச் சென்ற குரவனும் திரும்பி வந்தனன். மாணவர்கள் குரவனை நோக்கி, ''நீர் போர்க்களத்திலே சித்தனோடு போர்புரிந்து அவனுடைய அங்கங்களை வெட்டி வெற்றி பெற்றீரே! பின்பு யாங்கள் உம்மை அங்கு எங்கும் தேடிக் காணாமல் இங்கு வந்தோம்; எங்குப் போந்தீர்?'' என்றார்கள். அதனைக் கேட்ட ஆசிரியன் வியப்புற்று, ''யான் சித்தனுடைய உடலை வெட்டினேனல்லேன்; நீங்கள் இங்ஙனம் கூறுவது என்னை? என்போல் வந்து போர்புரிந்து சித்தனைக் கொன்றவர் யாவரோ? 'இது மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவுளச் செயலோ?

---

பார்வை, வாளுடன் நெருக்கல் மார்பொடு முனைத்தல், பற்றிநின்றடர்த்தல் உட்கையின் முறித்தல், ஆனனத் தொட்டல், அணிமயிர்ப் புரோகம், உட்கலந்(து) எடுத்தல், ஒசிந்திடம் அழைத்தல், கையொடு கட்டல் கடிந்துள் அழைத்தலென்(று), இவ்வகை பிறவும் எதிரமர் ஏறி, அவன் பகை முறிந்த அருட்பெருங் கடவுள்'' என வரும் கல்லாட அடிகளும், இருவருக்குங் காண்பரிய ஈசர்மதுரேசனார், விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனர்காண் அம்மானை விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே யாமாகில், அருமையுடம் பு) ஒன்றிரு கூ(று) ஆவதேன்? அம்மானை, ஆனாலுங் காயமிலை ஐயரவர்க்(கு) அம்மானை'' என வரும் மதுரைக் கலம்பகச் செய்யுளும் சிந்திக்கற்பாலன.

என்று கூறினன். அப்போது ஆசிரியன் மனைவியும் தன்னைச் சித்தன் நெருங்கி வந்து பலமுறையும், 'இடன் உண்டோ' என்று கேட்டதையும், நேற்று வந்து தன்கையைப் பிடித்து இழுத்ததையும், மனம் நொந்து அவனை வெளியில் தள்ளிக் கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்ததையும் கூறினள். அதுகேட்ட மாணுக்கர்கள், ''சித்தனை வாள் வீரர் கொல்லும் பொழுது இவ்வம்மையார் சொல்லியபடியெல்லாம் சொல்லியே கொன்ருர்; இஃது உண்மையாம்'' என்ருர்கள். அப்போது ஆசிரியன் ''இஃது எம்மை ஆண்டருளும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலே'' என்று சொல்லிக் கொண்டு தன் மனைவியோடும், வாள் வித்தை பயிலும் மாணுக்கர்களோடும் விரைந்து திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி ''எப்பெருமானே! திருமாலாலும், பிரமனுலும் அறியப்படாத உமது திருவிளையாடலை அறிவிலியாகிய அடியனேன் அறியும் அளவினதோ? தேவரீர் அருள் விளையாட்டை என்னென்பேன்!'' என்று துதித்தான்.

### பாண்டியன் வாளாசிரியனுதியோரைச் சிறப்பித்தல்

திங்கள் மரபில் வந்து தோன்றிய குலோத்துங்க பாண்டியனும் மதுரை நகரத்துள்ளோரும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை நோக்கி ஆனந்தக் கண்ணீர் வெள்ளத் தாழ்ந்து எம்பெருமானின் திருவடிகளை வணங்கி இசைப்பாட்டுக்களைப் பாடி ஆனந்தக் கூத்தாடித் துதித்து நின்ருர்கள். குலோத்துங்க பாண்டியன் ''அடியவருக்கு எளியவராகிய இச் சோமசுந்தரக்கடவுள் [1] பரதேசி காவலர்'' என்று கூறி அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் துதித்து, வாளாசிரியனையும் அவன் மனைவியாகிய மாணிக்கமாலையையும் யானையின்மேலேற்றி நகர்வலம் செய்வித்துச் சிறப்பித்தான்.

### குலோத்துங்க பாண்டியன் சிவகதி அடைதல்

பிறகு குலோத்துங்க பாண்டியன் தன் புதல்வனுகிய அனந்த குண பாண்டியனுக்கு முடி சூட்டித் தன்னரசை அவனிடத்து ஒப்புவித்தான்; நிலையுள்ள பொருள் இதுவெனவும், நிலையில்லாத பொருள் இதுவெனவும் உணர்ந்து நிலையற்ற பொருள்களின் மேலிருந்த பற்று

---

1. பரதேசி - வேற்று நாட்டவன்; இங்கு வாளாசிரியன், வேறு ஆதரவு இன்றி இருந்த வாளாசிரியனை இறைவன் பாதுகாத்தமையால் 'பரதேசி காவலர்' எனப் பெயர் பெற்ருர்.

முழுதும் விடுத்து, ஐம்புலன்களின் நெறியினின்றும் நீங்கித் திரு வருளின் வழியே சென்று தன்னைப் பதிந்து நின்ற ஆணவ மல வலி விட்டுஅகல இராகு உமிழ்ந்த சந்திரனைப்போல் விளங்கிச் சிவ பெருமானுடைய திருவடி நிழலைப் பிரியாத பேரின்ப வீட்டினை அடைந்தான்.

செய்யுள் — 28
ஆகச் செய்யுள — 1602

## 28. நாகமெய்த படலம்

### அனந்தகுண பாண்டியனின் சிவநேயம்

குற்றமற்ற பண்புடைய அனந்தகுண பாண்டியன் முழுமுதற் கடவுளாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவைந்தெழுத்து, விபூதி, உருத்திராட்சம் என்னும் இம் மூன்றுமே மெய்ப்பொருள் என்று தெளிந்து, அவற்றினிடம் அளவிறந்த பத்திமை பூண்டு தன் தந்தை முதலாகிய அரசர்களினும் மிகச் சிறந்து விளங்கினன். 'மன்னவனெப் படி மன்னுயிரப்படி' ஆதலாலே, மன்னனிடம் தோன்றிய சிவபக்தி அவன் நாட்டு மக்களிடமும் பெருகியது; அங்கு அறியாமையாகிய அக இருளும், புற இருளும் நீங்கித் திருவைந்தெழுத்து ஒலியும், திருவெண்ணீற்று ஒளியும் எங்கும் பரவின. பாண்டி நாடு சிவ பெருமானின் திருவேடம்போல் பொலிந்து விளங்கியது.

### சமணர்களின் சூழ்ச்சி

இங்ஙனம் பாண்டிநாடு சிவநேயமுற்றுத் திகழ்வதை, இருள் நிறைந்த உள்ளத்தினையுடையவராகிய சமண குரவர் எண்ணாயிர வரும் அறிந்து சினந்து, 'நெருப்பிற் காய்ச்சிய இரும்புபோல' மான மாகிய நெருப்புச் சுடப் பொறாமை கொண்டு பாண்டியனைக் கொல்ல வகை தேடினர்; ஒரு காத அளவு அளந்து வேள்விச் சாலை ஒன்று அமைப்பித்து, அதில் தீ வளர்க்கும் வேள்விக் குண்டமும் தோண்டித் தீயினை அதிலிட்டுப் புகை எட்டுத் திசைகளிலும் பரவவும், விண் மீன்கள் பொரிந்து பொரிபோல் சிந்தவும், வானுலகத்தைத்தாவி முட்டவும் நெருப்பினை எழுப்பி மூட்டினார்கள். அவ்வேள்விக் குண்டத் திலிருந்து பிலத்தினின்றும் எழுகின்றவனைப்போல், படமுடைய இருள் தங்கிய வாயினையும், வாயினிருபக்கங்களில் பிறைச் சந்திரன் போன்று முளைத்த நச்சுப் பற்களையும், ஊழித் தீயை உமிழும் கண்

களையுங் கொண்டு ஒரு மலை அசைந்து வந்தாற்போல ஒரு அவுணன் எழுந்து வெளிவந்தான். அங்ஙனம் வந்த அவுணன் வெகுண்டெழுந்து அமணர்களை நோக்கி, ''வடவைத் தீயைப்போல வருத்துகின்ற பசியும், நீர்வேட்கையும் மிகக் கொடியன; நீவிர் எனக்கு இடும் பணி யாது?'' என்று வினவ, சமணர்கள், ''நீ விரைந்து போய்ப் பாண்டியனை மதுரையோடும் எதிர்த்து எடுத்து விழுங்கிவிட்டு வருக'' என்று விடுத்தனர்.

### நாக வடிவுடைய அவுணன் தன்மை

அது கேட்ட அவுணன், வானத்தைத் தீண்டும் பெரிய உடலையும், விஷத்தைச் சொரிகின்ற துளையினையுடைய பெரிய பற்களையும் வடவைத் தீயைப்போல் எரிகின்ற கண்களையும், மலையின் குகை போலத் திறந்த வாயினையும் உடைய ஒரு பாம்பின் வடிவங்கொண்டு மலைபோல எழுந்து விரைந்து நடந்தான். அப்போது அவனுடைய பாதி உடல் புதைபடுதலால் நிலம் பிளவுபட்டது; அவனது பெருமூச்சின் முன் காற்றினது வலிமை இழந்தது; விழிகளுக்கு எதிர்ப்பட்ட பசிய பயிர்கள் கருகி வாடின; காடுகளும் சோலைகளும் கருகின; மரங்களில் வசிக்கும் பறவைகள் சிறகுகள் கருகிச் சுருண்டு கீழே விழுந்தன; நிலவுலகம் நடுங்கியது; உலகத்தைச் சுமக்கும் ஆதிசேடன் அஞ்சினான்; சூரியனும் சந்திரனும் திடுக்கிட்டனர்; இராகு கேதுக்கள் அஞ்சினர்; திசை யானைகள் கலங்கின; கூற்றுவன் அஞ்சித் திகைத்தான்.

### பாண்டியன் சோமசுந்தரக் கடவுளின் திருவருளைப் பெறுதல்

நாகவடிவுடைய அவுணன் மதுரைப்பதியின் மேற்குத்திசையை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்ட மக்கள் பாண்டியனை அடைந்து, அவன் அடிகளை வணங்கி, ''அரசே! மதுரைப் பதியின் மேற்றிசையில் ஒரு பெரிய பாம்பு அண்டங்களையும் மற்றையவற்றையும் ஒரு வாயிற் போட்டு உண்ணுதற்கு வருவதுபோல் பெரிய வாயினைத் திறந்து கொண்டு வருகின்றது'' என்று முறையிட்டனர். அது கேட்ட அனந்தகுண பாண்டியன் சிறிதும் அஞ்சாது ''முன்னே மதயானையை ஏவிய சமணர்களே இதனையும் விடுத்தார்கள் போலும். அதைப்போலவே இப் பாம்பினையும் கொல்லுதற்குப் பாம்புகளை அணிகலமாக அணிந்த சோமசுந்தரக் கடவுள் இருக்கின்றார்'' என்று நினைந்து, இறைவன் திருமுன் சென்று ''எம் பெருமானே! அடியேன் ஒருபோதும் உம்மை மறவாது வழி வழி

அடிமை செய்யும் இயல்பினேன்; நின் ஆணை வழியே ஆட்சி புரிந்து வாரா நின்றேன்; சமணர்கள் இந் நகர முழுதையும் அழிக்கக் கருதி விடுத்த பாம்பு வருகின்றது. உமது திருவருளின் வழியே அதன் உயிர் கழிவதைக் கருதினேன்; அடியேனுக்குக் கருணை செய்தருள்க; இது நினது கடனாகும்'' என்று தொழுது குறையிரந்தான்.

### பாண்டியன் பாம்பினைத் துண்டித்தல்

பிறகு, பாண்டியன் சிவபெருமானிடத்தே அனுமதி பெற்று வணங்கி, அவருடைய திருவடிகளைச் சிந்தையிற்கொண்டு புறத்தே வந்து அம்பும் வில்லும் எடுத்துக்கொண்டு மேற்றிசை வாயிலை அடைந்தான்; அங்கு மலையென்று சொல்லத் தக்க வடிவத்தோடு சினத்தீ சிந்தும் கண்களையுடைய பாம்பினை எதிரே வரக்கண்டான். அப்பொழுது பாம்பின் வடிவத்தையுடைய அவுணன், பலபுள்ளிகளையும் பிளந்த வாயினையுமுடைய படத்தைப் பரப்பி, எட்டுத்திக்குகளையும், கதிரவனையும் மறைத்துச் செறிந்த இருளைப் பரப்பிப் பல்லை அதுக்கிப் பெருமூச்சுவிட்டு, அகன்ற வாயைத் திறந்து, பெரிய நகர் முழுதையும் ஒருங்கே விரைந்து கௌவி விழுங்குதற்குச் சீறிச் சினந்தான்.

அப்போது ஆண்சிங்கம் போன்ற அனந்தகுணபாண்டியன் இடியேறும் அஞ்சும்படி ஆரவாரம் செய்தான்; கையில் வில்லையெடுத்து நாணைப்பூட்டித் தீ முகக் கணைகளைத் தொடுத்து விடுத்தான். பாம்பின் வடிவமாக வந்த அவுணன், வழுதி விடுத்த கணைகள் அனைத்தையும் துகள்படும்படி கடித்து உமிழ்ந்து சிதைத்தான். அதனைக் கண்ட பாண்டியன் மனம் பொறுமல் சோமசுந்தரக்கடவுளின் திருவடியை மனத்தில் சிந்தித்துக் கொண்டு, கொடியதாகிய ஒரு பிறைபோலும் வாயினையுடைய கணையை விடுத்துப் பாம்பின் உடலைத் துண்டுபடுத்தினான். அப்பாம்பாகிய அவுணன் இடிபோல் பேரொலி செய்து, இரத்தம் அருவிபோலப் பெருக உடல் புரளத் துடித்து வால்நெளிய இறக்கும் போது கொடிய ஆலகால விஷத்தின் பெருக்கைப்போலக் கரிய நஞ்சினைக் கக்கினான்.

### பாம்பின் நஞ்சு எங்கும் பரவுதல்

அக்கொடிய நஞ்சு இருள் பரவியது போல் மதுரைத் திருநகர் முழுதும் இடையீடின்றிப் பரவியது: சோலைகள், கிணறுகள், குளங்கள், நான்கு தெருக்கள் கூடுமிடம், கல்விச் சாலைகள், கடைவீதி,

அகழி, மதில், அரண்மனை, மாடங்கள், உப்பரிகைகள், மேடைகள், கோபுரங்கள், அரங்குகள் ஆகிய எல்லா விடங்களிலும் தாவிப் பரவியது. அந்நகரமக்கள் யாவரும் நஞ்சினுல் மயக்கி, உறங்கினர் போல வாடி, உடல் கம்பித்து வியர்வை அரும்பிப் புலன்களும் பொறிகளும் அந்தக் கரணங்களும் தலைதடுமாறி, மொழி குழறி, நாத்தழுதழுப்புற்று வரண்டு, கபம் மேலிட்டு அறிவழிந்து மயங்கி உயிர்ப்பு அடங்கி உள்ளேயுள்ள உயிர் அலைய ஊசல்போல ஆடிக் கிடந்தனர்.

## பாண்டியனின் வேண்டுகோள்

அனந்தகுணபாண்டியன் ஆலகால விஷத்தைக்கண்டு அஞ்சிய திருமால் போலத் திருக்கோயிலை அடைந்து வணங்கி, 'எந்தையே! யாவருக்கும் முற்பட்டவனே! ஆதி முதல்வனே! வித்தின்றித் தோன்றியவனே! முடிவில்லா முனிவனே! எனக்கு உரிமையானவனே! அன்பர்க்கெளியவனே! எல்லோருக்கும் தலைவனே! இந்நகர்க்கு எக்காலத்திலும் அரசே! அநாதியாயுள்ள மறையவனே! முக்கண்ணனே! அடியேன் உம்மிடத்தில் அடைக்கலம் புகுந்தேன்; முன்னே கடலைச் சுவறச் செய்தீர்! ஏழு முகில்களும் ஒன்றுகத் திரண்டு வந்து பெய்த மழையைத் தடுத்தருளினீர்! துதிக்கையால் விண்ணினைத் துழாவி வெண்பிறைபோன்ற கோட்டுடன் வந்த களிற்றினைக் கொன்றருளினீர்! இவ்வாறு இம்மதுரைத் திருநகரை பாதுகாத்து அருளிய தேவரீர் இப்பொழுது கொடிய விஷத்தினுல் வருந்தும் வருத்தத்தையும் நீக்கியருளும்'' என்று விண்ணப்பஞ் செய்தான்.

## மதுரை மாநகரம் விஷம் நீங்கித் தூய்மை அடைதல்

அருட்கடலாகிய சோமசுந்தரக்கடவுள் தம் திருச்சடையின்கண் அணிந்த இளம்பிறையினுடைய அமுதத்திலிருந்து சிறிது துளியைச் சிந்தியருளினுர். அச்சிறிய துளி, விரைந்து பாலிற் பிரை போல நகரமெங்கும் பரவி முன்னுள்ள மதுரை மாநகரமாகத்தூய்மை செய்தது.[1]

அருட்கடல் அனைய ஆதிநா யகன்றன்
அவிர்சடை யணிமதிக் கொழுந்தின்

---

1. முன்பு மதிக்கலையின் அமிழ்தால் சாந்தி செய்யப்பெற்று அதனுல் மதுரை எனப் பெயர் எய்தினமை திருநகரங்கண்ட படலத்துட் காண்க.

பெருக்கடை அமுதத் தண்டுளி சிறிது
பிலிற்றினன்; பிலிற்றிட லோடும்
பொருக்கென எங்கும் பாலினிற் பிரைபோற்
புரையறக் கலந்துபண் டுள்ள
திருக்கிளர் மதுரா நகரமாப் புனிதஞ்
செய்த(து) அச் சிறுதுளி அம்மா!

சூரியன் முன்னர் இருள் ஓடுதல் போலவும், இறைவனது திரு வருளின் முன்னே ஆணவமலத்தின் வலிமை கெடுதல் போலவும் எங்கும் பரவிய அமுதத்தினல் நஞ்சு நீங்கப்பெற்று மயக்கம் நீங்கி யாவரும் இன்பமுற்று மகிழ்ந்து இருந்தனர். அனந்த குண பாண்டி யன் அரவணிந்த சடையையுடைய சோமசுந்தரக் கடவுளுக்கு அன்பே வடிவமாகிய அரசுசெய்து கொண்டிருந்தான்.

செய்யுள் — 23
ஆகச் செய்யுள் — 1625

## 29. மாயப் பசுவை வதைத்த படலம்

### சமணர்கள் மாயப் பசுவினை ஏவுதல்

அனந்தகுண பாண்டியன், படம்பொருந்திய பெரிய பாம்பினைப் துணித்த பின்பு, அப் பாம்பினைப் பின் தொடர்ந்து கூட்டமாக வந்த சமணர்கள் காற்றினல் தள்ளப்பட்டுஓடும் மேகங்கள்போல உடைந்து மனங் கலங்கி ஓடினர். அங்ஙனம் ஓடினவராகிய சமணர்களனைவரும் ஓரிடத்தில் ஒருங்கு கூடி, ''நாம் முன்பு விடுத்த யானையைக் கொன் றதுபோலவே இன்று சென்ற பாம்பினையும் அழித்தனர்; இனிமேல் நாம் யாது சூழ்ச்சி செய்வது?'' என்று ஆலோசித்து, ''பசுவிற்கு ஊறு செய்யார்கள்; அதற்குத் துன்பஞ் செய்தலால் வரும் பழிக்கு அஞ்சு வார்கள்; ஆதலால், பசுவை விடுப்போம்; இதுவே தக்க உபாயம்'' என்று கருதி முடிவு கொண்டனர். பின்னர், பாவகாரிகளாகிய அச் சமணர்கள் முன்போலவே கொடிய வேள்வி ஒன்றினைச் செய்தனர். அப்போது, ஓமகுண்டத்தினின்றும் பசுவின் வடிவங்கொண்ட ஒரு அவுணன் வந்து தோன்றினன். 'அத்தி நாத்தி' என்று கூறிய அரு கனது உரையினைக் கொண்டுழலும் சமணர்கள் அப் பசு வடிவாகிய அவுணனை முன்போல் மதுரைத் திருநகரின் மேல் விடுத்தனர்.